உ

சிவமயம்

கணபதி துணை.

அட்டவீரட்டானத்திலொன்றாகிய

# திருக்குறுக்கைபுராணம்.

திரிசிரபுரம் மகாவித்துவான்

ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.



திருக்கைலாயபரம்பரைத்

தருமபுரவாதீனத்து ஸ்ரீலஸ்ரீ

சிவஞானதேசிகசுவாமி அவர்கள்

கட்டளையிட்டருளியபடி

திருக்குறுக்கை

ந. சோமசுந்தர உபாத்தியாயர்

முயற்சியால்

சிதம்பரம்

சிவசமயப்பிரசங்க ரத்நாகரம்

ஸ்ரீ அப்பாக்கண்ணு ஓதுவாரவர்களால்

தமது

ஸ்ரீலோகமாதா அச்சுக்கூடத்தில்

முன்பதிப்பிக்கப்பட்டதை

இப்பக்கமுதல் ஆறு பக்கங்களும் 250 காப்பிகள்

பேரளம் திருமீயச்சூர் பிரம்ம வித்தியா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# திருக்குறுக்கைவீரட்டம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

பண் திருநேரிசை.

---

திருச்சிற்றம்பலம்.

ஆதியிற்பிரமனார்தாமர்ச்சித்தாரடியிணைக்கீ
ழோதியவேதநாவருணருமாறுணரலுற்றார்
சோதியுட்சுடராய்த்தோன்றிச்சொல்லினையிறந்தார்பல்பூக்
கோதிவண்டறையுஞ்சோலைக்குறுக்கைவீரட்டனாரே. (க)

நீற்றினைநிறையப்பூசிநித்தலுநியமஞ்செய்து
ஆற்றுநீர்பூரித்தாட்டுமந்தணனறனைக்கொல்வான்
சாற்றுநாளற்றதென்றுதருமராசற்காய்வந்த
கூற்றினைக்குமைப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (உ)

தழைத்ததோராத்தியின்கீழ்த்தாபரமணலாற்கூப்பி
யழைத்தங்கேயாவின்பாலைக்கறந்துகொண்டாட்டக்கண்டு
பிழைத்ததன்றாதைதாளைப்பெருங்கொடுமழுவால்வீசக்
குழைத்ததோரமுதமீந்தார்குறுக்கைவீரட்டனாரே. (ங)

சிலந்தியுமானைக்காவிற்றிருநிழற்பந்தர்செய்து
உலந்தவணிறந்தபோதேகோச்செங்கணானுமாகக்
கலந்தநீர்க்காவிரிசூழ்சோணாட்டுச்சோழர்தங்கள்
குலந்தனிற்பிறப்பித்திட்டார்குறுக்கைவீரட்டனாரே. (ச)

ஏறுடனேழடர்த்தானெண்ணரியாயிரம்பூக்கொண்டு
வாறுடைச்சடையினானையர்ச்சித்தானடியிணைக்கீழ்
வேறுமோர்பூக்குறையமெய்ம்மலர்க்கண்ணைமீண்டக்
கூறுமோராழியீந்தார்குறுக்கைவீரட்டனாரே. (ரு)

கல்லினாலெறிந்துகஞ்சிதாமுணுஞ்சாக்கியனார்
நெல்லினார்சோறுணாமைநீள்விசும்பாளவைத்தா
ரெல்லியாங்கெரிகையேந்தியெழிறிகழ்நட்டமாடிக்
கொல்லியாம்பண்ணுகந்தார்குறுக்கைவீரட்டனாரே. (சு)

## திருக்குறுக்கைவீரட்டம்.

காப்பதோர்வில்லுமம்புங்கையதோரிறைச்சிப்பாரந்
தோற்பெருஞ்செருப்புத்தொட்டுத்தூயவாய்க்கலசமாட்டித்
தீப்பெருங்கண்கள்செய்யகுருதிநீரொழுகத்தன்கண்
கோப்பதும்பற்றிக்கொண்டார்குறுக்கைவீரட்டனாரே. (எ)

நிறைமறைக்காடுதன்னினீண்டெரிதீபந்தன்னைக்
கறைநிறத்தெலிதன்மூக்குச்சுட்டிடக்கனன்றுதூண்ட
நிறைகடன்மண்ணும்விண்ணுநீண்டவானுலகமெல்லாங்
குறைவறக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (அ)

அணங்குமைபாகமாகவடக்கியவாதிமூர்த்தி
வணங்குவாரிடர்கள்தீர்க்குமருந்துநல்லருந்தவத்த
கணம்புல்லர்க்கருள்கள்செய்துகாதலாமடியார்க்கென்றுங்
குணங்களைக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (கூ)

எடுத்தனனெழிற்கயிலையிலங்கையர்மன்னன்றன்னை
யடுத்தொருவிரலாலூன்றவலறிப்போயவனும்வீழ்ந்து
விடுத்தனன்கைநரம்பால்வேதகீதங்கள்பாடக்
கொடுத்தனர்கொற்றவாள்கள்குறுக்கைவீரட்டனாரே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

நெடியமால்பிரமனோடுநீரெனும்பிலயங்கொள்ள
வடியொடுமுடியுங்காணாரருச்சுனற்கம்பும்வில்லுந்
துடியுடைவேடராகித்தூயமந்திரங்கள்சொல்லிக்
கொடிநெடுந்தேர்கொடுத்தார்குறுக்கைவீரட்டனாரே. (க)

ஆத்தமாமயனுமாலுமன்றிமற்றொழிந்ததேவர்
சோத்தமெம்பெருமானென்றுதொழுதுதோத்திரங்கள்சொல் [லித்
தீர்த்தமாமட்டமீமுன்சீருடையேழுநாளுங்
கூத்தராய்வீதிபோந்தார்குறுக்கைவீரட்டனாரே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

## அட்டவீரட்டத் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

காவிரியின்கரைக்கண்டிவீரட்டானங் கடவூர்வீரட்டானங்காமருசீரதிகை, மேவியவீரட்டானம்வழுவைவீரட்டம்வியன்பறியல்வீரட்டம்விடையூர்திக்கிடமாங், கோவனகர்வீரட்டங்குறுக்கைவீரட்ட கோத்திட்டைகுடிவீரட்டானமிவைகூறி, நாவினவின்றுரைப்பார்க்கு நணுகச்சென்றானமன்றமருஞ்சிவன்றமரென்றகல்வர்நன்கே.

திருச்சிற்றம்பலம்.

---

## அட்டவீரட்டம்.

திருச்சிற்றம்பலம்.

பூமன் சிரங்கண்டி யந்தகன்கோவல் புரமதிகை
மாமன்பறியல் சலந்தரன் விற்குடி மாப்பழுவூர்
காமன் கோறுக்கை யமன்கடவூரிந்தக் காசினியிற்
றேமன்று கொன்றையுந் திங்களுஞ்சூடிதன் சேவகமே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருமூலர் - திருமந்திரம்.

திருச்சிற்றம்பலம்.

இருந்த மனத்தை யிசைய விருத்திப்
பொருந்திய லிங்க வெளியதூ போக்கித்
திருந்திய காமன் செயலழி யத்தங்
கருந்தவ யோகங் குறுக்கை யமர்ந்ததே.

திருச்சிற்றம்பலம்.

---

# படல அகராதி.



ஆக படலம் ௨௪. செய்யுள் ௭௩௬

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குறுக்கைப்புராணம்.

## விநாயகக்கடவுள்.

காப்பு.

நீர்கொண்ட மழைதவழ்மால் வரைச்சாரற் றினைப்புனத்து நீபத்தொண்பூந்
தார்கொண்ட பன்னிருதோட் டம்பியார் பெருங்காத றணிப்பா னன்பர்க்
கேர்கொண்ட தன்னுருப்பொன் றிரண்டிரண்டு மூன்றுமுன் றிரண்டிரண்டு
பார்கொண்ட நான்கைந்தொன் முகவரு குஞ்சரத்தைப் பரவி வாழ்வாம். (௧)

## கடவுள்வாழ்த்து.

### வீரட்டேசுரர்.

பூமேவு நறுங்கமலத் திருமுனியுந் தருமுனியும் புழைக்கைத் தானத்
நாமேவு கடாச்களிறு காத்தவனும் பூத்தவனு மாயி னானுந்
தூமேவு மகவானும் புகவானும் பிறவுமருள் சுரந்து நல்கி
மாமேவு குறுக்கையமர் வீரட்டே சுரர்மலர்த்தாள் வணங்கி வாழ்வாம். (௨)

### ஞானம்பிகை.

பற்றுமொரு கழைகுழைத்தோர் கணைதொடுத்தா னுடல்பொடித்த பரமயோ
சற்றும்வணங் காதமுடி நனிவணங்க வவன்சாபஞ் சாம்போற் போமோ [கி
முற்றுமிவை காரணமா தலினழியா வெனக்கரும்பு மூரி வில்லு [வாம்.
மெற்றுமது மலர்க்கணையுங் கொண்டருண்ஞா னம்பிகைதா ளிறைஞ்சி வாழ்

### மன்மதசங்காரமூர்த்தி.

ஓங்குமவ னன்றியோ ரணுவுமசை யாதென்ப தியாருந் தேரத்
தங்குசிவ யோகிருந்த ஞான்றுயிரொ லாமிருந்த தன்மை தேர்ந்துங்
கொங்குமலர் மலரொன்று கருதாதிட் டவன்சேர்ந்தார்க் கொல்லி யாசப்
பொங்குநுதல் விழிமலர்ந்த பரமகுரு சாமிபொற்றாள் போற்றி வாழ்வாம். (௪)

### பூரணியம்மை.

இறையவனைத் திறநிற்பா னிறைவியுமத் திறநிற்பா ளென்று நன்னா
னிறையவுணர்ந் தவர்கருணை யாலுரைக்கு மாத்தமொழி நிசமே யாக
மறையவனு தியருணரான் யோகிச னய்ர்குறுக்கை மருவு ஞான்று
பொறையருள்கூர் ஞானமுனைந் துடன்மருவு பூரணியைப் போற்றி -

## சபாநாயகர்.

மன்னுதி யாருறுக் கப்பாலா யெப்பாலும் வயங்கா நின்ற
விண்ணுதி யெட்டுருவந் தொறுநிறைந்து மறைமுதனூல் விரித்துக் கூறு
மெண்ணுதி கடந்தடியோ மிதையாதி கவர்ந்துமன்றத் தென்று மோங்கற்
பெண்ணுதி யெவருமகிழ் தரநடஞ்செய் பெருவாழ்வைப் பேணி வாழ்வாம்.

## சிவகாமசுந்தரி.

மாலாதி யுயிரிடத்து வைத்த பெருங் கருணைவள மலிதலால்விண்
காலாதி யைம்பூதக் கலப்புறு தவையின்பக் கலப்பு மேய
மேலாதி முதல்வனியற் றுணர்ந்த நடங்காணும் விரதம் பூண்ட
சேலாதி மருட்டும்விழிச் சிவகாம சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம். (எ)

## வயிரவக்கடவுள்.

ஆக்கும்வினை மலரயனை தன்றென்றற் கவனுதத மாங்க நான்குந்
காக்கும்வினை மாயவனை தன்றென்றற் கயன்மேனி கழிநெய்த் தோருந்
தாக்கும்வினை யாளருந்தேர் சான்றுணைக்கக் கூர்கொளுகிர்ச் சாங்கத்தோடு
போக்கும்வினைச் சூற்படையு பாங்குமுங்கொள் வடுகனடி போற்றி வாழ்வாம்.

## குறுக்கைவிநாயகக்கடவுள்.

இருதிணையு நிறைந்துறைவ தொருதானே யெனல்புவனத் தியாருந்தேறக்
கருதிணையி லத்திணைசேர்ந் தாகியவோர் மூர்த்தியகஞ் சதிர்ப்ப மேவி
மருதிணைகொன் றயனையறு தியர்வணங்கி வாழ்த்துதொறும் வரங்க ணல்கி
யொருதிணையும் வழுவாது நடாத்துகுறுக் கைக்களிற்றை யுளங்கொள்வாமே.

## சுப்பிரமணியக்கடவுள்.

மழைபெறு முழுமலையு மெழுமலையுந் தோளவுணர் வருக்க மாயப்
பிழையேறு கருங்கடலும் பெருங்கடலு மொருங்கடலும் பிறங்கு வானத்[ட
துழையேறு தலைமறந்தா ரொருங்கேறு தனுமுளங்கொண் டொருகை தொட்
குழையேறு சமரவேற் குமரவே டிருவடிக டலைமேற கொள்வாம். (க0)

## திருநந்திதேவர்.

வேறு.

பஞ்சா வரணைத் தடைநீங்கிப் பங்கே ருகனு தியர்புறத்தே
பஞ்சா ரடியா ளொருபாகன் பாதங் கலக்க விடல்போல்வெப்
பஞ்சாம் வகைநிற் பவரகத்தே பஞ்ச பாசத் தடையொழிந்தின்
பஞ்சா ரொளியிற் கலக்கவிடும் பரம னந்தி பதம்பணிவாம். (கக

## அகத்தியமுனிவர்.

வேறு.

பழையகாப் பியக்குடியோன் பனம்பாரன் முதலானோர்
விழைய நூற் றிறமுழுதும் விரித்துரைத்துக் குறவுபூண
டுழையவா மதர்நெடுங்க ணுமைபாமுத் திரையொடுமெண்
[illegible] வாம். (கஉ

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வேறு.

எழுதரிய மறைமொழிபுக் குழுதறியாச் செவித்துளையி னிழுதையே யோதாய்ப்
பழுதமையும் புறச்சமயர் கெட்டோமென் றழப்புகலிப் பதிநீப் பொய்கை
முழுதமையுங் கனாகின்றோர் மழவாகி யழுதறியா முதலை நோக்கி
யழுதமறைக் குழவியடி தொழுதகையே மாகிவினை யழுவந் தீர்வாம். (௧௩)

## திருநாவுக்கரசுநாயனார்.

இருளென்று சொலத்திரியா மனம்வேவ நீற்றறையு ளிருந்து முற்றேம்
வெருளென்று துயர்க்கடலு ளவரமுந்தக் கருங்கடற்கன் மிசைமிதந்து
மருளென்று மாறாத வெண்ணீறுங் கண்மணியு மைந்தெழுத்தும்
பொருளென்று தெரிவித்த புண்ணியவா கீசர்பதம் போற்றி வாழ்வாம். (௧௪)

## சுந்தரமூர்த்திநாயனார்.

சதிர்த்தநுதல் வெண்ணீறுந் திருமார்பிற் கத்தூரி கமழுஞ் சாந்தும்
விதிர்த்தவடி வான்பொருகட் பரவையார் முலைச்சுவடும் வேதமேயென்
றதிர்த்ததமிழ்ச் செவ்வாயும் பெருமானே பணிபுரிதற் கமைவான் றீமை
யுதிர்த்ததிருப் பேரன்பு முடையவா ரூரரடி யுவந்து வாழ்வாம். (௧௫)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

மன்னுமருட் குரவனாய்க் குருந்துறையும் பெருந்துறையில் வதிந்தகோமான்
கொன்னுமொலி மலிகுதிரைச் சேவகனாய் மண்சுமக்குங் கூலி யாளா
பின்னுமொரு தரஞ்சொலெனக் கேளாமற் சொற்றபடி யெழுது வோனாய்த்
துன்னும்வகை நெக்குருகு வாதவூ ரண்ணலடி தொழுது வாழ்வாம். (௧௬)

## தண்டீசநாயனார்.

வேறு.

காரொடு முரணுங் கண்டக் கண்ணுத லுவந்த வட்டந்
தாரொடு கலமு மன்றித் தனக்கென வேறு வேண்டாச்
சீரொடு பொலிதற் கேற்பச் செங்கையின் மழுவுங் கொண்டு
நாரொடு பொலிதண் டீச னகைமலர்ப் பாதம் போற்றி. (௧௭)

## அறுபத்துமூவர்.

வேறு.

நகைய மைந்த வன்றொண்டர் நவிறொண்டத்
தொகைய மைந்த தொகையடி யார்களுந்
தகைய மைந்த தனியடி யார்களும்
வகைய மைந்தவென் னுள்ளத்து வாழ்வரோ. (௧௮)

## பஞ்சாக்கரதேசிகர்.

வேறு.

திரமலி கைலை வெற்பிற் சிவபிரா னருளப் பெற்ற
வரமலி நந்திப் புத்தேள் மரபினை விளக்கி ஞானத்
துரமலி துறைசை மேவு மொருநமச் சிவாய தேவன்
றரமலி பாதப் போதே தலைக்கணி யாக்கி வாழ்வாம் (௧௯)

# திருக்குறுக்கைப்புராணம்.

### அம்பலவாணதேசிகர்.

வேறு.

துன்னு பாசந் துவைத்தரு ளுய்க்குமான்
முன்னும் வேத முழக்கெழு கோமுத்தி
மன்னு மம்பல வாணநந் தேசிகன்
பொன்னு நேரிலம் போருக பாதமே. (௨௦)

### மற்றையடியார்கள்.

குறுக்கை நாயகன் கோயிற் பணிவிடை
வெறுக்கை யின்றி விரும்புநர் கற்பணி
யொறுக்கை செய்யர சான்முத லோர்ந்தவை
மறுக்கை செய்பவர் யாவர்க்கும் வந்தனம். (௨௧)

கலைய ரோனுங் கணையின் மகம்புரி
நிலைய ரோனுமன் பில்லவர் நீசரோ
புலைய ரோனும் புராணற்கன் புள்ளவர்
தலைய ரன்னவர் தாடொழு வாமரோ. (௨௨)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

---

## அவையடக்கம்.

வேறு.

அரிதகு விடமுண லெனுத ருந்தினே
னரிதகு வினையெலா மைய வென்னுமெய்
யரிதகு யாதியை யடைய நல்குவோ
னரிதகு வனத்தம ரமலன் மான்மியம். (௧)

முன்னிய வடமொழி மொழிபெ யர்த்தினி
துன்னிய தமிழினு லோத வேண்டுமென்
றன்னிய முருதுபே ரருட்க லப்புற
மன்னிய நீறுகண் மணித ரிப்பவர். (௨)

உழுதொழில் புரிந்துல கோம்பு மேன்மையர்
பழுதகல் வாய்மையர் பரவு மன்பினர்
தொழுதகு சிவார்ச்சனைத் தொழில ருதவ
ரெழுதரும் பெரும்புக ழியைந்த போரவையர். (௩)

தன்மைசேர் பெருங்குணச் சைவர் யாவரு
முண்மைசேர் வாய்மலர்ந் துரைக்க வுட்கொடு
வண்மைசே ரவர்மொழி மறுத்தற் கஞ்சியே
வெண்மைசே ரறிவினேன் விளம்பன் மேயினேன். (௪)

வேறு.

கருப்புவின் மலரோக் கொண்டு கறுத்தெழு காமற் காய்ந்த
பொருப்புவிற் பெருமான் காதை பொருமிரு வினைக்கோட் பட்டே
யருப்பிள முலையார் மால்கொண் டலைபுலை நாயே னுய
விருப்புவன் மனத்தேன் கூறு மிஃதிழும் பூதாம் யார்க்கும். (௫)

வேறு.

மாமத கனங்கொ ளெனக்கறுத் தார்த்து வருமொரு கரியுரி செய்தோன்
றாமத கனம்புக் குலாய்வருங் கழனி சூழ்திருக் குறுக்கையம் பதியோன்
காமத கனஞ்செய் கண்ணுதற் பெருமான் கறைமிடற் றிறையவன் கதை
நாமத கனஞ்சா துரைப்பது மணையா னற்பெருங் கருணையா லன்றே. (௬)

வேறு.

கற்றார்த நன்மொழியே கோடுநின்போன் மடமைகொடு காலம் போக்க
லுற்றார்தந் தீமொழியுங் கோடுமோ வெனக்குறுக்கை யொருவன் கேட்கிற்
பற்றார்தண் ணமுதங்கான் மதியன்றி வெவ்விடங்கால் பாம்புங் கூட்டிச் [னே.
சுற்றார்செஞ் சடைக்கணிந்த தென்னென்பே னதற்கவனென் சொலவல் லா

மொழிமுதலா காதஙக ரமுமகரஞ் சார்ந்துமுத லாய்ச்சுட் டாதி [வன்
வழிவரல்போன் மொழிமுதலா காதவென்பா டலுங்குறுக்கை வளர்மா தே
பழிதபுகா தையைச்சார்ந்து முதலாய்ச்சுட் டாதிவழி படரு மாலீ
தழிவிலிய லுணர்ச்சியரோர் குவரதனால் யானவர்க்கொன் றறைவ தில்லை.

வேறு.

இணையிலாக் குறுக்கை மேய வீசன்மா லன்றி வேறு
கணையிலாப் பெருமான் காதை கடைப்பிடித் துரைக்க லுற்றே
னணையிலாப் பிறவி வேலை யகற்றுதற் காய வேறு
புணையிலா துணர்ந்து கைக்கொள் புணையிதே யெனத்து ணிந்தே. (௭)

அவையடக்கம் முற்றிற்று.

---

## சிறப்புப்பாயிரம்.

வேறு.

பூமலிய மணிகொழிக்கும் பொன்னிசூழ் குறுக்கைநகர் பொலியோ கீசர்
தேமலியுஞ் சரிதம்வட மொழியிலிருந் ததைத்தமிழிற் றெளியச் செய்தான்
காமலியுந் திரிசிரா மலையுதித்துப் பரமதமாங் கருளை யோட்டி
மாமலிய மேவுகதிர் மீனாட்சி சுந்தரநா வலன்மிக் கோனே. (௧)

---

# திருநாட்டுப்படலம்.

வணங்கு மாலய னாதியர் வேட்டன வழங்கி
யிணங்கு ஞானநா யகியொடு மெங்கள்யோ கீச
னணங்கு தீர்தர வமர்தரு குறுக்கைமு னளவி
லுணங்கு றுத்தலந் தழுவுசோ ணாட்டணி யுரைப்பாம். (௧)

குலவு ஞாலமுற் றோம்புவா னிகழ்பெருங் கொண்மூ
நிலவு மாமதிற் குறுக்கைநா யகன்றிரு நீறு
கலவு மேனியோர் பாதியின் விளர்த்தெழீஇக் கதிர்க
ளுலவு வான்வழிக் கொண்டுசென் றிருங்கட லுற்று. (௨)

அரவு சூடுமெந் நாயகன் சடைமுகி லவனி
யுரவு நீரமே லெழுபுனல் குடிப்பதை யொப்ப
விரவு மாகடற் புனல்குடித் தத்தகு விமலன்
பரவு மற்றொரு பாதிமே னியினுடல் பசந்து. (௩)

அந்த நாயகன் யானையை யுரித்தநா ளதுமண்
சிந்த வாய்திறந் தார்த்தெனத் திசைதொறு மார்த்துப்
பந்த மோவுமந் நாயக னெடுஞ்சடைப் பரப்பி
னந்த வாளராக் கணமெலா மின்னுத னவிற்றி. (௪)

அன்ன நாயகன் மேனிமேல் யானைத்தோல் வளைந்த
தென்ன மால்வரை யெங்கணு மிடமற வளைந்து
சொன்ன நாயகன் காமவேள் மேற்சினஞ் சுரந்தாங்
குன்ன மாகொடுங் கோடைமே லுறுசினஞ் சுரந்து. (௫)

அனைய தம்பிரான் கட்டழ குடையவே ளழிந்தாங்
கினைய வானுத லிடத்தமர் கண்டிறந் தென்னத்
துனைய வாரழ லினுஞ்சுடு கோடைபோய்த் தொலையப்
புனைய வாயதம் பாற்பொலி பல்கணுந் திறந்து. (௬)

இன்னு மன்னவன் மேருவில் வாங்கிய தேய்ப்ப
மன்னும் வையக மகிழ்தர வில்லொன்று வாங்கி
மின்னு மன்னவன் கருணையே பொழிவது விழையப்
பொன்னு நேரிலாப் பெருமழை யோகனி பொழிந்த. (௭)

கழிந்து வீழ்தலை மாலையான் செஞ்சடைக் காட்டில்
வழிந்து வீழ்பெரு வெள்ளமோ வெனப்புவி மருள
வொழிந்து வீழ்தலி லாவரை முகட்டுநின் றொருங்கே
யிழிந்து வீழ்புன லருவியே மருவிய தெங்கும். (௮)

பரவு நாயக னல்வகைச் சத்தினி பாதர்க்
குரவு மேவுதன் னருள்பொழி தருதிற மொப்ப
விரவு நாற்றிணைக் கவணவன் வேண்டுமா தெரிந்து
கரவு நீர்தரப் பொழிந்தன மழைதழை கனமே. (௯)

திருந்து பல்லிடத் துஞ்செறி தாரைக டிரண்டு
பொருந்து பல்வழிக் கொண்டுகா விரியகம் புகுமா
லருந்து மண்ணகத் துறைசனம் பலவழி யடைந்து
மருந்து நேர்புன லாடவந் நதிபுகன் மானும். (௧௦)

வேறு.

புனைதபு முகிறேய் குன்றம் புனைந்தநீண் முடித்தேர் மானு
மினைதிரைப் பொன்னி யத்தேர்க் கிட்டநீள் வடத்தை மானுங்
கனையிரு பாலுந் தாழ்ந்து கவிழ்சினைத் தாரு வெல்லா
நிலையினவ் வடந்தொட் டீர்த்து நிற்பவர் மானு மாலோ. (௧௧)

பயந்தரு முழக்கி னானும் பரந்தபன் முகத்தி னானு
மயர்ந்திடா நடையி னானு மத்திகின் டொழுக லானும்
வியந்தடு வெண்மை யானும் வெற்பினின் றெழுத லானும்
வயந்தரு சிங்கம் போலு மறிதிரைப் பொன்னி யாறு. (கஉ)

கோடிரண் டுடைமை யானுங் குவட்டொடு பொருத லானுஞ்
சூடிய மணியி னானுந் துதிக்கைகொண் டொழுக லானு
மூடிய நுரையென் றோது முகபடாங் கோட லானு
மோடியன் மதநீ ரானு மும்மலே பொருவும் பொன்னி. (கங)

வரையெனும் புருடன் பொன்னி மாநதி யிருகோ டென்னும்
புரையிறு ணீட்டி யாழி புக்கமஞ் சகங்கை யள்ளி
யுரைசெய்தன் றலைமேல் விட்டுக் கொள்ளவாங் கதுவ ழிந்து
தரைமிசை யொழுகல் போலுந் தவாவொழுக் குறுநீர்ப் பொன்னி. (கச)

அடிவரை மலரோன் பாக மமரநடு வரைமால் பாக
முடிமகா லிங்கம் பூசை முயன்முனி வரர்குன் றுள்வோர்
தடிமுகிற கணங்க டங்க டாரைமஞ் சனஙகா வேரி
நெடியகோ முகைபே ராழி நிறைதரு நீர்த்தத் தொட்டி. (கரு)

வரைவரை வுருவ மாய மாதேவ னவன்று ளிட்ட
விரைசமழ் நெடிய மாலை விரிநதி யிரண்டு கோடும்
புரையிலம் மாலை யம்மா பொழிநறு வெள்ளம் போலுங்
கரையகம் புறமவி ராய கமழ்சுவைப் பொன்னி நீத்தம். (கசு)

மழைவரை முகட்டி லேறி மாதமும் மாரி பெய்யத்
தழைதரு புனல்கா வேரி சார்ந்தொருங் கோடி வீரை
விழைதர நிறைத லாலவ் வீரைக்கு முந்நீ ரொன்று
பழையநூ லுணர்ந்தோர் கூறும் பரிசிலீ துணர்ந்து போலும். (கஎ)

ஞானசம் பந்தர் மேக ஞானப்பா னரலைந் தோய
மீனசம் பந்த நக்கு மிருந்தமிழ்ப் பாடன் மாரி
யூனசம் பந்த ராய வருகந்த ரொழிந்த கோடை
மானசம் பந்தச் சைவர் மண்மிசைத் தழைத்த பைங்கூழ். (கஅ)

செக்கர்வான் சடையுந் திங்கட் சிறுபிறை யேனக் கோடுந்
தக்கவென் றணிந்த வானச் சங்கரன் மழைவில் வாங்கி
திக்கவாங் கடனீ ரம்பு சேர்த்துநேர் செலுத்து முன்னம்
புக்கவெங் கோடை யாய புரமுர னற்ற தன்றே. (ககூ)

பிழைவளம் பெருக்கி நாளும் பிழைவளங் கருதி யுள்ளங்
குழைவளங் கருதா யானோ கூறவல் லவன்சோ னாட்டு
மழைவள முழுதுஞ் செந்தேன் மலிவளம் பொலிகு றிஞ்சி
விழைவளுஞ் சிறிது சொல்லேன் வேலைவா யிகையி னானே. ( 0)

## குறிஞ்சி.

வேறு.

குமர வேளின மாதலி னவன்குடி கொள்ளுந்
தமர வாரரு வித்திணை சார்ந்துதங் களுக்கு
மமர மான்மிய முண்டென லறிவித்தாங் கலர்ந்து
பமர மேவுறு தமர்வன வேங்கைகள் பலவும். (உக)

கந்த வேளரு விப்புன லாடவுங் காந்தள்
சந்த மார்விரை சூடவும் பூசவுந் தவாத்தே
னந்த வேனன்மா வருந்தவு முளங்குறித் தன்றோ
வெந்த நாளுமால் வரையக நீங்குறா திருத்தல். (உஉ)

அருவி யார்ப்பன வொருபுறந் தொண்டக மாதி
மருவி யார்ப்பன வொருபுற மழைகண்டு மஞ்ஞை
யிருவி யார்ப்பன வொருபுற மினமழை யாய
கருவி யார்ப்பன வொருபுறங் கானவர் குறிஞ்சி. (உங)

களைசெய் பேரள வாம்பனை பொருந்தியுங் கடையாந்
திணைசெய் நெய்தல்போ லாதறி வாளர்சிற் றளவென்
றுரைசெய் நுண்டினை பொருந்தியு முதன்மையுற் றோங்கும்
வரைசெய் வான்றிணை யோல்வது மற்றெது மண்மேல். (உச)

உரல றைக்குழி யானைக்கோ டுலக்கையோங் கேனற்
குரல்மி திப்பது கயமுனிக் குழாங்குளி ரருவி
நிரல்வி ளைப்பதக் குரல்களை நிகழ்குற மடவார்
விரல்ப றித்தெறி கவண்கலு மிளிர்பல மணியே. (உரு)

இலகு செம்மணி கொழித்துவெள் ளருவிக ளிழியு
மலகு தீர்புக ழமைந்தவீங் கோயுமே லாய
வுலகு மேத்தமேற் பறந்தெழு காகத்தை யொழித்தல்
விலகு றுதவாட் போக்கியுங் குறிஞ்சியோ வேறோ. (உசா)

ஏயு மாறொரு நாய்கர்தங் குலமகட் கிரங்கித்
தாயு மாகிய தம்பிரா னெங்கடா யொடும்பொன்
வேயுங் கோயில்கொண் டமர்திரி சிராமலை மேவத்
தோயு மாதவ முடையது குறிஞ்சியே சொல்லில். (உஎ)

பிறையும் வாளராக் குலமுமந் தாகினிப் பெருக்கு
நிறையுஞ் செஞ்சடை நின்மலப் பரஞ்சுடர் நீங்கா
துறையுங் கற்குடி மாமலை யொன்றுவா ளுட
ரறையு மேன்மையக் குறிஞ்சியின் றவமெவ ரறைவார். (உஅ)

மண்ணு ளாரொடு மளவளாய் வான்சுனை மூழ்கி
விண்ணு ளார்தொழுந் தொறுமவ[illegible]கருளிமே தகுமுக்
கண்ணு ளாரம ரெறும்பியூர் மலை தாரு [illegible] கயிலைப்
[illegible]ண்ணு ளார்மறைப் பாட்டொ[illegible]வர் மானு மா[illegible]வும்.

குழைவி ராவிய செவிப்பிரான் றிருவருள் குறித்து
முழைவி ராவிய யோகிய ரருந்தவ முடிக்கு
மழைவி ராவிய மால்வரை யனையவன் வகுத்தா
முழைவி ராவிய கானத்தின் வளஞ்சிறி துரைப்பாம். (௫௰)

## முல்லை.

வேறு.

தமக்குவள மிகக்காட்டுஞ் சுரு மறைகூ றியமகங்க
டமக்குவள மிகக்காட்டுந் தடருசெருத்த லுடைப்பசுக்க
டமக்குவள மிகக்காட்டுந் தானங்க ளெனவனங்க
டமக்குவள மிகக்காட்டுஞ் சரிக்குமுகிற் குலம்பலவும். (௫௧)

பரியாய்நங் கதியடையும் பகவனிட மெனமுயலு
மிரியாநம் மினம்புணரு மேந்தலிட மெனமானுந
சரியானாய் நமைச்சூடுந் தகையினிட மெனத்துளவும்
பிரியாமே யினிதமரும் பெற்றியகா னகமுழுதும். (௫௨)

பூத்தபிட வெதிர்மலர்ந்து பொலிகாயா நெடுஞ்சாகை
யாத்தகொடி மலர்முல்லை யெழுசிறுகாற் றசைதோற்ற
மேத்தவரு பனிக்குநவத் தெம்பிரா னெதிர்மாரன்
கோத்தகரத் தலைவிடுத்தல் குறித்துமுயல் வதுமானும். (௫௩)

பூமலிந்த காயாமேற் பொலிபலா சுறவுகுத்த
தேமலிந்த மலர்மூடச் சேர்ந்ததுநின் றிடுதோற்றங்
காமலிந்த சடைப்பெருமான் கட்டழல்போய் மேல்வளைப்ப
மாமலிந்த மாரனுரு மறைதரநின் றதுமானும். (௫௪)

தலைவர்தமைப் பிரிந்துறையுந் தையன்மட மாதருயிர்
நிலைதளரும் படியெழுவ நிரைமணிவண் கார்மாலை
குலைதருமம் மாதாமுகங் குளிரவுட னேயெழுவ
மலைபொருதோ ளவர்விடுதேர் மணியொடவர் தார்மாலை. (௫௫)

வெள்ளேறும் வெண்பாலும் வெண்டயிரும் வெண்ணெய்யுங்
கள்ளேறு வெண்டளவுங் கனல்வெள்ளாம் பியுமறுகாற்
புள்ளேறு வெண்பிடவும் வெள்வாகும் பொலிந்துவனத்
துள்ளேறு தலின்முதலா மொருகுணம்போர்த் தெனப்பொலியும். (௫௬)

விண்ணினார் வந்துதொழ வேட்டனவேட் டாங்கருளி
யெண்ணினார் தமக்குமிட ரிரித்தருளு நெடுங்களமு
மண்ணினார் பிரிவொல்லா வருணியம முங்கடல்சூழ்
மண்ணினார் தருமாறு வனஞ்செய்த தவஞ்சிறிதோ. (௫௭)

திருந்துபுகழ் மிகுமேலைத் திருக்காட்டுப் பள்ளியுமுன்
பொருந்துமிள கத்தனையும் புதுப்பயறே யெனப்புரிந்த
மருந்துநிகர் பெருமானார் மகிழ்ந்துறையு மாத்தலமு
மிருந்துபொலி தரத்தவஞ்செ யிருங்கானப் புகழ்பெரிதால். (௫௮)

மாச்சுரமேலோ கழும்புகழும வளக்கங்கை கண்டசே
னீச்சுரமே முதலாய வெண்ணரிய பலதலத்து
நாச்சுரக்கும் புகழ்ப்பெருமா னயந்துறையப் பெற்றதெனி
லேச்சுரனி லாதவன மினிப்பெறவேண் டியதெவனே. (௩௯)

அண்டர்பிரான் பூசனைக்கா மானைந்தும் பாற்றுகும்
வெண்டயிர்பா னெய்யுநறு வி ழுமமற் றுங்கொடுக்கும்
வண்டளவ வனவளமென் வகுத்தாமிந் திரனகாவல்
கொண்டமரு நதியிணையின் குளிர்வளமுஞ் சிறிதுரைப்பாம். (௪௰)

மருதம்.

வேறு.

இலைமலி கடுக்கை மாலிகைப் பெருமா னிடத்துமா யவன்கிளைத் தென்னக்
குலைமலி பொன்னித் திருநதி யிடத்துக் கொள்ளிடத் திருநதி கிளைத்த
தலைமலி பாய லன்னமா தவன்பா லலரவன் கிளைத்தென நாளு
நிலைமலி தருமக் கொள்ளிட நதிபாற் கிளைத்தது நிகரிலா மண்ணி. (௧)

மொழிதரு மலர்மே லண்ணல்பாற் கிளைத்த முனிவரர் குழாமென நாளு
மொழிவரு மண்ணி யெனுந்திரு நதிப்பா லுறுபெருங் கால்பல கிளைத்த
வழிவரு மனைய முனிவர்பாற் றோன்று மன்பதைக் குழாமென மதகி
னுழிவரு பல்காற் பாலுறக் கிளைத்த வுரைக்கடங் காச்சிறு கால்கள். (௨)

இத்தகு நதியி னிகழ்பிவை யாக விருபத்து நால்வொன் றுரைக்கு
முத்தமர் தமக்கு மூலமே யாய வொருசிவ கோசமே போல
முத்தம்வெண் டிரையா லெடுத்தெறி யரிசின் முள்ளிமுற் பற்பல நதிக்கும்
வித்தக மூல மாகியே நாளு மிளிர்வது கண்டகா வேரி. (௩)

கண்டகா வேரி யீன்றபல் லாற்றுங் காலெலா மளவிடப் புகுவான்
கொண்டவேழ் கடலுண் மணலெலா மளந்து கொண்டிருக் கின்றனனிற்க
வெண்டபு பெருமா னருளுயி ரளவைக் கேற்குமா றிருப்பதை யெய்ப்ப
விண்டநன் னிலத்தி னளவினுக் கேற்ப விளைந்திருந் ததுபெரு வெள்ளம்.

வேலையிற் பாயு முகில்பொழி புனல்கா விரிமத கூடுபோய்ப் பல்பூஞ்
சோலையிற் பாயு மோடையிற் பாயுந் துறுமலர்த் தடந்தொறும் பாயு
மாலையிற் பாயு மமைந்ததண் ணடைதோ றவிர்தரப் பாயுமங் கழனி
மாலையிற் பாயு மாதலாற் புனற்கு வம்பல வம்பெனு நாமம்.

ஆன்றவப் பூதி நாயனார் நாவுக் கரையனைக் கண்டது போலுங்
கான்றசோ றென்றே யிருமையுஞ் சண்டு கழிக்குநா லாவது சத்தி
யூன்றநேர் வாத வூரர்கோன் குருந்தி னொருவனைக் கண்டது போலு
மீன்றதா யனைய காவிரி நறுநீ ரெதிருறக் கண்டனர் களமர். (௭)

வயலெலாம் பரந்த புனலெதிர் நோக்கி வருத்துறு வேனிலால் விளைட, வயலெலாம் பொருந்தப் பொருத்திடு நீரா லுறைதரு வெய்யரால் விணட, செயலெலாம் வல்லார் பொருந்திடப் பொருத்துந் தெளிவுடைச் சாந்தர் போன றதுவால், கயலெலா முலவு சமயமென் றுரைத்தார் களையிலா மகிழ்ச்சியிற் களமர்.

ஒருமலா்பறித்துத் தொடுத்தவன் மேனி யொருங்கெரித் தமையுளத் துணர்ந்
திருமலர் முகத்தார் பன்மலர் பறித்துச் செருச்செய வெழுந்தது போல [து
வுருமல ரனைத்துங் களைந்தபின் காம முண்மலர் மயக்கம் வெங்கோபம்
வெருமல ரிவைதீர் தவந்தடித் தென்ன வீறின தடித்தபல் பயிரும். (௫௭)

தடித்தபல் பைங்கூழ் வெண்கதிர்ப் புணர்ந்து தாங்கருக் கொண்டமை தெரிப்
பொடித்தவெண் கதிரம் மதிமுக நோக்கப் போந்தென வான்றலை நிறுவி [பான்
வடித்தநீர்ச் செவிலி நிறந்தெரித் தாங்கு வயங்கவுள் விளர்த்தொரு பாற்றண்
முடித்தபூ நற்றாய் நிறந்தெரித் தாங்கு முழுதுமேற் சேர்ந்தன பின்னும். (௫௮)

அனையநற் றாயைப் பணிதல்போற் படிந்த வளவையின் மதுக்கவர் பருவந்
துனையவுண் ணுக்கும் வண்டரி னரிந்து தொகுக்குமோர் பருவமுண் ணுக்
வினையவன் களம ரரிந்தனர் சுமந்து மிக்கபோர் செய்துபின் சரித்து [கும்
முனையகோட் டெருமைக் கடாப்பல பிணைத்து முழுமையு முறமிதிப் பித்து.

துன்றுவை களைந்து பதரறத் தூற்றித் தொகுத்தறம் புரிவன புரிந்து
மன்னுமற் றுள்ள முழுமையு மளந்து மன்னவர்க் காறிலொன் றுதவிப்
பன்னுதென் புலத்தா ராதிய ரொடுதாம் பகிர்ந்துண மனையினுய்த் துவப்பார்
மின்னுசெங் கரும்பின் வளத்தொடு பிறவும் விரும்புவார் தழனியே யெங்கும்.

கரும்புமங் கமுகுங் கதலியு மாவுங் கஞல்பொழிற் சிதம்பர மாதி
விரும்புதண் காழி வீழிதென் னாரூர் மிக்கமா யூரம்வே ளூர்சீ
ரரும்பிடை மருதா வடுதுறை குடமூக் கானைக்கா முதற்பல தலஞ்சால்
பெரும்புகழ் மருதப் பெருமையா ருரைப்பார் பேசுவா நெய்தலின் வளமும்.

## நெய்தல்.

சுறமருப் பூன்றித் துணர்மலர் சூட்டித் தொழுந்தொறும் வருணனுர் தோன்றி
யறுவளம் வலையர்க் கருள்வதற் கிடமா யமைதரு நெய்தலிற் கைதை
மறுமலர் மணத்தான் மறிதிரைக் கடல்வாய் மண்டிய புலவற மாற்றி
யுறுவடுத் தவர்தம் பழிதப மாற்றி யுயர்பவர்க் கினமெனவோங்கும். (௬௨)

வெள்ளிய முத்தங் குளிக்குந ரொருசார் மீன்களை யேற்றுந ரொருசார்
துள்ளிய மீனம் போழ்பவ ரொருசார் துன்றவுப் பிடுபவ ரொருசா
ருள்ளிய வவையாங் குணக்குந ரொருசா ருற்றபுள் ளோப்புந ரொருசார்
தள்ளிய வுணங்கல் விற்பவ ரொருசா ரதவாதவுப் பளப்பவ ரொருசார். ()

திரையெறி புனலுண் முகிற்பெரு முழக்குந் திமில்விடு வார்பெரு முழக்குங்
கரையெறி மறிவெண் டிரைப்பெரு முழக்குங் கழியுழக் குநர்பெரு முழக்கு
மிரையெறி பெருமீ னுணங்கலோ வுணங்க லென்றிசைப் பார்பெரு முழக்கு
முரையெறி நாவா யிழிபெரு முழக்கு மொழிவன வல்லவெஞ் ஞான்றும். ()

மறையெலாம் போற்றி வரம்பெறப் பொலியு மாப்பெருந் தலமும்வெண் முத்தக், துறையெலாஞ் சொரியு நாகப்பட் டினமுந் தொண்டுசெய் வார்க்கருள் புரிந்து, கறையெலா மறுக்க வல்லசாய்க் காடுங் காமரு முல்லைவா யிலுமுட், குறையெலாந் தீரக் கொண்டநெய் தலையார் கூறுவார் திணைமயக் குரைப்பாம். (௬௫)

திணைமயக்கம்.

வேறு.

கருவளை யடியமர் கரும்ப லாவடி
மருவமேற் போகிய வனப்ப லாசலர்
தொருவறப் பொலிதிற மொளிசெய் மஞ்ஞைமேற்
றிருவருங் குமரவேள் சிவணன் மானுமே. (௬௬)

சாணமர் கருங்குயில் கழனி மாந்தருந்
தேனமர் துணர்கொழு திக்கு லாவுவ
மாணமர் வனம்புகூஉ வயல்வெள் ளோதிம
மானமா பால்குடித் தயர்வு யிர்க்குமே. (௬௭)

கழைவய லைக்கொடி தாவி நீலத்தின்
கிளையுற வளைத்தலுங் கிளர்சி னங்கொடு
வளைகடற் றுகிற்கொடி மண்டு தாமரை
யுளைதர வளைப்பன வுடலு மாக்கள்போல். (௬௮)

திணைவன மான்கொள றெரிந்து சாமையுந்
துணைநிகர் குறிஞ்சியிற் றங்கு மான்கொளும்
பணையிளங் காய்புனற் பணையு ளார்கொளக்
கணைகட லாரிலாங் கலிகொள் வாரரோ. (௬௯)

ஏயவிந் நானிலத் தெல்லையெங்கணும்
பாயதம் மொழுக்கருப் பண்பு சால்குடி
மேயசீர் நாட்டணி விரித்து ரைத்திட
வாயவே றறிஞர்க்கு மடங்கு றுதகே. (௭௰)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௱௨.

# திருநகரப்படலம்.

கோநக ரெனவுளங் குறிக்குங் கற்பகக்
காநகர் சமழ்ப்புறக் கருது பல்வள
மாநக ரெம்பிரா னமர்கு றுக்கைநன்
மாநகர் வளஞ்சில வகுதலுங் கூறுவாம். (௧)

பால்வளை மலர்க்கரன் பதுமக் கோயிலான்
கால்வளை தொறுமவர் கருத்து முற்றுவித்
தோல்வளை கடற்புவி யுவப்ப மேவிடுங்
கோல்வளை யாகனுர் குறுக்கை மாநகர். (௨)

முடியிடை யணந்தனுற் சுமக்க முற்றிய
படியிடை யுருதூறப் பதிந்துள் வாரத்
தடியிடை யின்பமே விளைத்துச் சால்புறுங்
கொடியிடை பாகனார் குறுக்கை மாநகர். (௩)

பாமக டொழத்திரு வழங்கும் வண்கலை
நாமக டொழச்சலை நல்கும் வீரமிக்
காமக டொழவருள் தளிக்கு மால்வரைக்
கோமகள் பாகனார் குறுக்கை மாநகர். (௪)

பதியெனுங் குறுக்கையே பரந்த பூமிமற்
றதினுறு மாளிகை யவனி மால்வரை
அதிமிகு மப்புவி சூழ்க ருங்கடன
மதிவள ரங்கள் வளைந்த சோலையே. (௫)

குறுக்கையொன் னகர்ப்புறங் குலவு சோலையே
வெறுக்கைவின் னகாமிசை விராய்நி முற்றலா
லொறுக்கைசெய் கதிரின்வெப் பொழிந்து மெய்விய
னறுக்கையு மடைந்தனர் வான வாழ்க்கையர். (௬)

நன்றுசா லத்தரு நகர முட்பட
வொன்றுபூஞ் சோலையே துறைமுகிற்குல
மென்றும்வா னுடர்கண் ணேறு றுவகை
நின்றுமேன் மறைத்திடு நீர்மை யொக்குமே. (௭)

நிறைபுனற் றடத்தக நெடிய கோட்டமர்
குறையறு மலர்த்தடங் கோடு தோன்றுவ
வறைதிருப் பெருங்கட லகத்து முன்னைநா
ணறைமலர்த் தருவமா நயந்தெ ழிக்குமே. (௮)

அளியகத் தாமரை யகத்துள் ளோதிமஞ்
சளியுறப் பொருந்தலாற் கதிர்ப்ப மேவிடுந்
தெளிபுனற் பெருந்தடஞ் சிறக்கு மஞ்சமே
யொளியகத் தாமரை யுறினு ருதமென். (௯)

பூவுடைக் கொடிவிராய் வளைந்த பூங்கமழ்
மேவுடைச் செறுவெலா மிக்குச் சூழ்வன
சேவுடைக் கொடியர்மேற் சினந்து மீட்டும்வே
ளேவுடைச் சிலைபல வெடுத்தன் மானுமே. (௧௦)

ஒருமதன் கொடியென வுற்ற தங்குலத்
தொருகய லழித்தவற் குரிய சேவொடு
மொருவுறப பொருதமே லுலகிற் கேகல்போ
லொருவரு புனற்படர்ந் துகளுஞ் சேற்குலம். (௧௧)

யாரிமேற் கொடிபல வுள்ள யாள்விடு
மூரிவா னுலகுதிர் பொடியின் மூழ்கியே
சீரியல் வேழங்க டிரித லாலன்றே
பேரியல் மாதங்க நாமம் பெற்றதே. (க )

கரியுரி போர்த்திய கண்ணு தற்பிரா
னரிபரி யாக்குபு நாடி யிந்நகர்த்
திரிபரி நிகர்தராத் திறத்தின் மீட்டமை
பரிநரி யாக்கினன் பரவி டாமலே. (கங)

அன்னிறத் தொளிர்கலத் தண்ண லூர்தரு
பொன்னிறத் தேர்மிசைப் பொலிவி றப்பின
வெந்நிறத் தேர்களு யிரிய மேற்செலும்
பன்னிறத் தேர்பயின் மறுகு பற்பல. (கச)

அண்டவா ணர்கள்பிரா னழன்று வெஞ்சினங்
கொண்டஞான் றிலும்புறங் கொடாத்தி றத்தினற்
றண்டமேந் தொருவன்மேற் சமர்கு றித்தெழு
மெண்டவா வீரரு மெண்ணிலா ரரோ. (கரு)

வேறு.

வளமலி குறுக்கை மாநகர் புகுந்த மாரவே ளந்நகர் மாந்த
ருளமலி வனப்பு மாத்திர நோக்கி யுற்றனன் சோகமச் சோகக்
களமலி திருமேண் டெரிந்தன னன்றிக் கல்லிடற் குவந்தநங் கடவு
ளளமலி பூவொன் றிடமுனிந் தெரித்தான் சத்திய மெனலசத் தியமே. (கசு)

மாரனு ரவிய வனப்புமிக் கமைந்த மைந்தரை வணக்குதல் குறித்தவ்
விரனுர் கவிகை மதியமம் மைந்தர் விழைதரு மாதர்கட் டமுகு
கூரனுர் முகமாய்ப் பொலிதலா னன்றே குலவிராப் பொழுதணை தோறுஞ்
சீரனு ரனைய மைந்தரை வணக்கித் திகழ்மகிழ் பூத்தினி தாடல். (கஎ)

நம்மையு ரிறைவன் றெற்றவிந் நகரு ளும்புக றகாதெனல் குறித்தோ
செம்மைசேர் மடவார் மேனியி னொளியே தின்றிடு நமையென றெளிந்தோ
வெம்மையூழ் மழுங்க விரிகதிர் மாட வியன்மணி தூரக்குமென் றுணர்ந்தோ
வெம்மைவாழ் குறுக்கை யகத்தக விருள்போ யிரிந்தது காண்புறத் திருளும்.

மாளிகை யனைத்து மால்வரை யெங்கும் வாள்விடக் குயிற்றிய மணிகள்
கோளியன் மணிகண் மங்கையர் மயில்கள் குழவிளம் போதகங் குமரர்
யாளிக டுவசத் தருநெடுங் கழைகள் யாத்ததோ ரணங்கறிக் கொடிகள்
வாளியல் வாய்தன் மாமுழை மடவார் வார்த்தையம் மால்வரைத் தேனே.()

ஊடுறு மடவா ரஞ்சிலம் பொலிக்கு முறுசிறு பொழுதல் தொழியக்
கூடுறு மடவாா மேகலை யொலிக்குங் குறிபெரும் பொழுதுமே னிலத்து
நாடுறு மமரர் மனத்தழுக் கறுத்து நாடொறு முறைதலா லன்றே
நீடுறு மசவு மின்றியே யுறங்கு நீர்மையு நீத்தனர் மாதோ.

# திருக்குறுக்கைப்புராணம்.

வேறு.

மாதர்தங் காதும் வள்ளை வாய்வரு பாட்டும் வள்ளை
சூதல்செய் நடையு மன்னங் கைபொழி வனவு மன்ன
மாதரா மொழியுங் கிள்ளை யணிமுலை யுறலுங் கிள்ளை
மேதரு தாருங் கற்பே விடுபடா தென்றுங் கற்பே. (௨௧)

கருங்குழ லொலிக்கும் வண்டு கையினு மொலிக்கும் வண்டு
மருங்குல்சாய் முலைசி லம்பு மலரடி யுறுஞ்சி லம்பு
நெருங்குழைபைங் குழனு மஞ்சு நிறைந்துசொட் டிடுமே மஞ்சு
தருங்கரும் புருவஞ் சாபந் தடிப்பரி தவர்வாய்ச் சாபம். (௨௨)

வல்லிய முறழு மைந்தர் மங்கையர் மணவி ழாவிற்
பல்லிய முழக்க மோர்பாற் பரவும்யாழ் முழக்க மோர்பால்
வில்லிய னுதலா ராடும் வியத்தகு முழக்க மோர்பாற்
புல்லிய பலர்க்கு மேன்மேற் பொன்சொரி முழக்க மோர்பால். (௨௩)

திருநலங் கனிந்த மாதர் சீறடிச் சுவடு தோயா
வொருவிய வரங்கம் பொன்செ யுபரிகை மாடங் கூடம்
பொருவரு தெற்றி மைந்தர் பூணணி மார்பந் திண்டோண்
மருமலர்க் குஞ்சி யில்லை வயங்குமந் நகரின் மாதோ. (௨௪)

அறம்பயி லொருவர் செல்வ மடுத்தாரு மடைவ னென்னுந்
திறம்பயில் வார்த்தை மெய்யே சிறந்தவந் நகர்க்கி டங்கு
நிறம்பயில் சேர்வுங் கீழ்பா தலமுமே னிலவு வைப்பு
மறம்பயி றங்கி டங்கு மதிலெனப் பொலிவ நாளும். (௨௫)

மாரவேட் செற்றூர் பாத மனங்கொடு பவஞ்ச வாழ்க்கை
தீரவே துறந்தா ருண்மை தெளிதர வணையாற் சூழ்ந்த
வீரவே னெடுங்கட் சேனை மேவிவந் திருத்தன் மானும்
பாரவே தண்டக் கொங்கைப் பரத்தையர் குடியு மோங்கும். (௨௬)

இனியன கேட்கக் காண நுழையமற் றிருக்க யாவுந்
துனியன செய்துட் கொண்டு சுமக்கமைந் தருக்கு நாளுங்
கனியன மொழியார் வாழுங் காமரி லாகி லெங்க
டனிமுதல் வாழுங் கோயிற் றுனமோ வுணர்கி லேமால். (௨௭)

உறுப்பினிற் குறைவி லாத வுரியனோ விரத்தி யாரின்
வெறுப்புற மயக்கி யுள்ளும் புறமுமிக் கொத்தார் போலாய்
மறுப்படு மொன்றை யேயன் மைந்தர்க்கும் வழங்கி நீங்கென்
றுறுப்பினு நீங்கா தாங்கே யுழறரப் போகம் விற்பார். (௨௮)

சுரந்தபல் பொருளு நல்கித் தொண்டும்பூண் டொழுகத் தக்க
பரந்தபே ரின்ப மெங்கள் பரம்பரன் பாலு ஞான
வரந்தரு குரவன் பாலு முளதென்பார் மற்றிவ் ஊர்வா
ழரந்தடி கண்ணார் பாலு முள்ளதென் றறையா தென்னே. (௨௯)

உடல்பொரு ளாவி மூன்று மொருங்கு கொண் டின்ப நல்கு
மடன்மலி குரவ ரேயோ வறைந்தன வடைந்து ளார்பால்
விடலரி தெனக்கைக் கொண்டு விரும்புறு மின்ப நல்குங்
கடல்விழிப் பொதுமி னாரோ கடிதருள் செயவல் லாரே. (௫௰)

வேறு.

நதிகு லத்தவ ரென்பதற் கியைபுனி தமுஞாலத்
துதிமி குந்தவே ளாண்மைசெய் யாற்றலுந் துகடீர்
மதியின் மிக்கசீர் வாய்மையுஞ் சைவநன் மாண்பும்
பதியின் மிக்குவே ளாளர்வா ழிருக்கையும் பலவால். (௫௧)

என்ன வேண்டினும் வினவிடா தேற்கவு மேற்ற
வன்ன யாவையு மினங்குறி யாதளித் திடவுஞ்
சொன்ன யாவையுஞ் சுருதியா கவும்வளஞ் சுமந்த
பன்னரும் புகழ் நாய்கர்வா ழிருக்கையும் பலவால். (௫௨)

உரவு சான்மரு வலர்வளைத் தாண்டம ரொருங்கு
புரவு சான்றதாங் கைக்கொடு மற்றவர் பொருந்த
விரவு வானக மளித்திடு வென்றியான் மிக்கார்
பரவு வேல்வல மன்னர்வா ழிருக்கையும் பலவால். (௫௩)

நீடு தீத்தொழி லொடாறு மோம்பியு நிலவக்
கூடு பல்பசு வுடம்பழித் தும்பழி கூடார்
கேடு மாக்கமு நாவினா லமைப்பவர் கிளர்ந்து
பாடு மாமறை யாளர்வா ழிருக்கையும் பலவால். (௫௪)

அயன்கொள் சீர்த்தியும் பிற்பட விறைவனா லமைத்த
வியன்கொ டெய்வவே தாகம முணர்ந்தவர் மேன்மே
னயன்கொ டங்களான் மார்த்தமும் பரார்த்தமு நயந்து
பயன்கொ ளாதியஞ் சைவர்வா ழிருக்கையும் பலவால். (௫௫)

எழுது மாமறை யாதிய விலக்கிய மெவையு
முழுது மாகிய விலக்கணங் களுந்தகு முறையே
தொழுது சாருமா ணாக்கர்த முளங்கொளத் துறுத்தும்
பழுதில் போதகா சாரிய ரிருக்கையும் பலவால். (௫௬)

ஓங்கு மந்திரங் கிரியைபா வனையிவை யொருங்கு
தேங்கு மாறுவந் தடைந்தவர் பெறத்தகு தீக்கை
யாங்கு மேவரப் புரிந்தருட் கலப்புற வமைக்கும்
பாங்கு மேவுநல் லாரிய ரிருக்கையும் பலவால். (௫௭)

ஆய தத்துவத் துருவமுங் காட்சியு மமைவின்
மேய சத்தியும் வாய்ந்துகற் கண்டுமேற் செருக்கற்
றேய பொருண் மூழ்கியொன் றிரண்டறு மின்பிற்
பாயு ஞானமா முனிவர ரிருக்கையும் பலவால். (௫௮)

மோர ளாவிய தெளிவுநீர் நறுமண முகந்து
சீர ளாவிய சுத்தநீர் செறிந்ததெங் கிளநீர்
பேர ளாவிய சுவைக்குள நீர்பெரி தமைந்து
பார ளாவிய நறும்புனற் பந்தரும் பலவால். (௫௯)

கோலு மின்சுவைக் குய்கமழ் கறிகளுங் குணமே
சாலு மூறிய காய்களுஞ் சமைந்தமென் பசமு
மேலும் பொன்னிறப் பருப்புமின் பாகும் வெண்டயிரும்
பாலு நெய்யுமே யாயசத் திரங்களும் பலவால். (௬0)

வேறு.

தெருண்மலி மனத்தவர் செறியுஞ் சீருடைப்
பொருண்மலி யந்நகர் புணரி நள்ளிருள்
வெருண்பலிந் தொழிதர விளங்கி ளங்கதி
ரருண்மலி தம்பிரா னமருங் கோயிலே. (௬௧)

மன்னுதம் மினமெனு மதிலோர் மூன்றையு
முன்னுவெந் தழல்சுட முயன்ற வானவர்
துன்னுபொன் னகரடத் துணிந்தெ ழுந்தன
மின்னுபன் மதில்களும விண்கி ழித்தவே. (௬௨)

வானக மடவெழ லுணர்ந்து வல்விடம்
போனக மாக்கினோ னேவப் போந்துமேற்
பானகம் பொரவிருந் திருத்தும் பான்மைபோல்
மேனக மதின்மிசை விடைகள் வைகுமே. (௬௩)

உலகளந் தவன்மக னுணர்வு ரூதுசெய்
கலகமுட் கொளல்கடைக் கணியென் றட்டியர்
விலகநின் றெதிர்வரம் வேண்டி நின்றென
விலகநின் றிடுமணி யிசைக்குங் கோபுரம். (௬௪)

குலவய னரியிளங் குறும்பு மாய்த்திட
நிலவணி சடைப்பிரா னின்ற தும்பொருஉம்
பொலமணிக் கோபுரம் பொருத்துந் தீபமங்
நலவரைத் தலையொளிர் சிகையெந் நாளுமே. (௬௫)

தனைத்தரு மொன்றனைத் தானு மீனுவா
ரினைத்தருங் கருக்கொடு நிலவு நீர்மைபோற்
கனைத்தவண் டடப்புன லகங் கதிரத்தடு
மினைத்தெனுக் கோபுரத் தேற்று நீபமே. (௪௬)

தனைவளைத் திடுவது தவிரப் பொன்வரை
நினைபல வுருக்கொடு நிற்றல் போன்மென
முனைமழு ப்படையினுன் முதலி யோரமர்
வினைவலத் தமைபல்பொன் விமான மோங்குமே. (௪௭)

அடுமாஞ் சிதைக்கும்வே லனுக்கு முண்கண்மை
யிடுமாம் பையாபுண ரிலேகர் வாழ்நரக்
கொடுமா மேருவாக் கோட்டி னுர்கொரு
கடுமா நிழற்றுமெக் காலு நின்றரோ. (௪௮)

முன்னிய பெருமறை முழங்கு மோதையும்
பன்னிய நால்வர்வாய்ப் பாட்டி னேதையு
மின்னியம் யாவையு மெழுப்பு மோதையு
மன்னிய காலங்க டோறு மல்குமே. (௪௯)

ஆபவிப் பெருந்தளி யகத்தென் னுள்ளமு
மேயனு னம்பிகை யோடு மெய்ம்மைசா
றாயயோ கீசன்வீற் றிருந்து சூழ்பவ
மோயமன் பதைக்கரு ளுதவு நாளுமே. (௫௦)

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௫௨.

# நைமிசப்படலம்.



மறைமுதற் கிழவன் பாங்கர் மாதவ ரொருங்கு சென்று
நிறைமகிழ் பூப்பத் தாழ்ந்து நெடுநிலத் திடையூ றின்றி
யறைதவ மியற்ற வெங்கட் காவதோ ரிடங்காட் டென்ன
நறைமலி கமலச் சேக்கை நயந்தவப் பிரம னோர்ந்து (௧)

தழைதரு தருப்பை நேமி தன்றிருக் கரத்தா லொன்று
விழைதர வியற்றி மண்மே லுருட்டிவிட் டிது விளம்புங்
குழைதரு மனத்தி ரிந்த நேமிபோய்க் குலவத் தங்கு
மழைதவழ் காட்டி லைகி மாதவம் புரிமி னென்றான். (௨)

# திருக்குறுக்கைப்புராணம்.

திசைமுக னுரைத்த வாறே நேமியைத் தொடர்ந்து சென்றார்
வசைதபு முனைய நேமி வளமலி கங்காதீரத்
தசைவரு காட்டிற் றங்க வன்றுதொட் டதற்கு நாம
நசைவுற வறிவின் மேலோர் நைமிசா ரணிய மென்பார். (௩)

மன்னிய தவத்தோ ராங்கு மகிழ்ந்தினி திருந்து நோற்கத்
துன்னிய வளத்த தாகிச் சுராதிபன் பொழிலு நாண
மின்னிய பூசழ்ந்தோங்கி மெல்லிய தளிர்பூ வாதி
யுன்னிய பலவுந் தாங்கி யொளிருமவ் வனமெஞ் ஞான்றும். (௪)

கரியுரி போர்த்த மேனிக் கண்ணுத லிருக்கை யானும்
புரிதவ முனிவர் நாளும் போற்றிடு சிறப்பி னானும்
வரியளி பூட்டுஞ் சாப மாரவேள் பகைமை யானு
மரிதகி வனமே நேரு நைமிச வனமற் றம்மா. (௫)

கூவிளம் பொருந்த லானுங் கொன்றைமா மணத்தி னானு
மூவரு மதிவான் யாறு முனி வறத்தவழ்த லானு
மோவருந் * துரோணந் † தூர்வை யுடைமையி னானு மெங்க
டேவனார் சடைக்கா டொக்குந் திருந்துநை மிசப்பூங் காடு. (௬)

காமமே முதலாங் குற்றங் கழித்திடா தசுர ராற்று
நாமமே வளர்க்கும் வானோர் நயந்தகற் பகக்கா டென்றும்
வாமமே கலையா ராசை மறலிசெய் நடுக்க மாதி
யேமமே மிகமாய்த் தோங்கு மென்றுநை மிசக்கா டம்மா. (௭)

அறிவமர் தீர்த்த மாகி யாவரு மறியு மாதன்
குறிவெளிப் படுத்தி யாங்குக் கோகன தங்கள் பூத்து
நெறியுற மூழ்கு வோர்க்கு நினைத்தன யாவு நல்கு
மெறிதிரை யறஞ்சால் வாவி யெண்ணில வயங்கு மாங்கண். (௮)

அரசுசம் பீரங் கொன்றை யகவுமா கோவி தாரம்
புரசுமூந் திரிகை கண்டில் புன்னையா மலக மாவேய்
விரசுமந் தாரங் கோங்கு வேம்புவெட் பாலை வன்னி
பரசுகூ விளம் விளாவால் பாரிசா தம்பூ வத்தி. (௯)

தாழைபச் சிலைய சோகு சண்பக ஞாழல் பாகல்
வாழைகற் கும்பம் வேங்கை மருதுபூ வரசு நொச்சி
யேழிலைம் பாலை சந்த மிலந்தைகுங் கிலிய நாவல்
வீழியே ரண்டம் புன்கு வெண்ணெய்ச்சே புளிமா தேக்கு. (௧௦)

---

* துரோணம் - தும்பை எண்காற்புள். † தூர்வை - அறுகு.

வழைகுருந் திருப்பை தேற்று மாதவி நரந்தம் பாக்கு
விழைகளா வோமை முன்னை வெட்சி பாதிரி கடம்பு
தழைமகிழ் செருந்தி யாத்தி தாலம்வண் குரா குறிஞ்சி
குழைதரு தான்றி சிந்தங் கொடுங்கருங் காலி வாகை. (௧௧)

நறுவிலி வருணம் பாலை நகுமதுக் காரை காஞ்சி
யுறுகர வீர மித்தி யோடுவில் லழிஞ்சி லீந்து
செறிமணை முருங்கை யாதி செழுமரந் துவன்றக் கொண்டு
நெறியடைந் தவர்க்கு நல்கி நிலவுமக் காடு நாளும் (௧௨)

வளமலி யிளைய கான வாழ்க்கையர் வான வேந்தன்
றளமலி மலரின் மேலான் றண்ணறுந் துளபத் தாரான்
களமலி யிளையர் தோற்றங் கழிவுபற் பலகண் டுள்ளா
ருளமலி சுவண மோட்டிற் காண்பவ ருயர்ச்சி மிக்கார். (௧௩)

வெள்ளிய நீறு மக்க மணியுமைந் தெழுத்து மேலா
வுள்ளிய மறையின் சார முண்மையென் றுட்கொண் டுள்ளார்
தள்ளிய செருக்கர் வாரி தவழினுஞ் சலிப்பொன் றில்லார்
வள்ளிய சிவபிரானைக் கனவினு மறவா மாண் பார். (௧௪)

அவநெறி புகுத்து நூல்க ளனைத்தையுங் களைந்து போக்கிச்
சிவநெறி புகுத்து நூலே சிந்தையிற் றெளியக் கொள்வார்
பவநெறி யொருங்கு மாய்க்கும்பரம் பரன்பாத பத்தித்
தவநெறி வளர்க்கு மேலார் சாந்தமே யுருக்கொண் டுள்ளார். (௧௫)

அகத்தியன் பரத்து வாச ளுணிமா ண்டவிய னுளுஞ்
சகத்திய லுணர்தராத சகன்சவு னகன ருக்கன்
மகத்துவ வாம தேவன் வசிட்டனு ரதன் சாபாலி
சுகத்து மார்க் கண்டேயன்விச் சுவாமித்தி ரன்சு வேக்யன். (௧௬)

சாமதக் கினியவக்கி ரிதன்பரா சரனெஞ் ஞான்று
மேமமுற் றுயர்ந்தகாத்தி யாயன னிலகு சம்பு
மாமவுற் கலியன்கண்ணு வன்கவு தமன்ற தீசி
நாமமுற் றுயர்ந்தசைவ நற்றுரு வாசப் பேரோன். (௧௭)

தண்ணிய குணத்துச்சாதா தபமுனி யாதி யாய
புண்ணிய முனிவர்பல்லோர் பொலிந்தினி தொருங்கு கூடி
யண்ணிய பன்னிரண்டாண் டளவுசெய் யாக மொன்று
பண்ணிய விரும்பியாரம் பஞ்செய்தா ரனைய காலை. (௧௮)

புராணநீ ரொனைபாருதி யாவையும் பொருந்த வோர்ந்தோன்
தராதல மதிக்கு மேன்மைச் சங்கரற் கன்புசான்றோன்
பராவுமைந் தெழுத்தி னுண்மை பாலிக்கும் படிமச்செல்வன்
சுராதிபன் முதலோ ரேத்துஞ் சூதமா முனிவன்வந்தான். (௧௯)

வந்தமா முனியைக் கண்டு மனமகிழ்ந் தாங்கிருந்த
சந்தமா முனிவர்யாரு மெதிர்கொடு தாழ்ந்து போற்றி
முந்தவா தனத்தினேற்றி முகமனான் முறையி னாற்றி
நந்தவா ரிகையினேரே யிருந்திது நவில லுற்றார். (௨0)

பொருவரும் யாகமொன்று பொலியயாஞ் செய்யும் போது
மருவருந் தெய்வங்கொண்டு வந்துவிட் டனுநின் றன்னைப்
பொருவரும் பெரியோர்காட்சி போருமோ பயன் படாமல்
வெருவுறும் பிறவியேழும் வேரறுத் துயர்ந்த மேலோய். (௨௧)

இகபர முத்திமூன் றுங் கண்டமாத் திரத்தே யெய்தத்
தகவமர் மூர்த்திதீர்த்தந் தலமொரு மூன்று மிக்க
சிவம்லி வதுவாய்க காணு தென்னனி னுஞ் சிறப்புநல்கி
யவமறுப் பதுவா யுள்ள காதையொன் றறைதியைய. (௨௨)

மூன்னுமெத் தனையோசொற்ற யவற்றுள முதன்மை சான்ற
இன்னுமொன் றியம்பவேண்டு மியம்பிடா தேகல் கூடா
துன்னுமா னந்தக்கூத்த ருவமையில் குஞ்சிதத் தாண்
மன்னுசிந் தையினுயென்று மாதவர் வேண்டி னால். (௨௩)

முனிவர ரிரப்புவார்த்தை செவிபுக முக மலர்ந்து
கனிதரு மனத்தனுகிக் கழறுவன் சூத மேலோன்
புனிதமா தவத்தீர் நீங்கள் புரிந்துணை ராததில்லை
யினியதென் முகத்தாற்கேட்ப தென்னிடத் தருளாலன்றே. (௨௪)

என்றுரைத் தன்புகூரச் சிறுபொழு துள்ளத் தெண்ணித்
தொன்றுரை யாடல்செய்யா வொருதலந் துணிந்து சூழ்ந்து
நன்றுநீர் வினையவாறே நவிலுவன் கேண்மி னென்று
கன்றுமும் மலமுந்தீர்ந்த காட்சியோன் கழற லுற்றான். (௨௫)

வேறு.

நலமலியுந் திருக்கைலை நம்மான்பா லருள்பெற்ற நந்திப்புத்தேள்
குலமலியுந் திருவடிக்கே யன்புபூண் டொழுகுசனற் குமாரமேலோன்
பொலமலியு மலரடிகள் போற்றியுயர் வியாதமுனி புகல்புராணம்
வலமலியும் பரமனுக்கோர் பத்தரிக்கு நான்குமலர் மகற்கிரண்டால் (௨௬)

உறுகதிர்க்கு மழலவற்குந் தனித்தனியொன் றுகவீ றொன்பா னென்ன
மறுவில்புரா ணங்களுண்முற் பத்ததிக மவற்றுளொன்றாய் வயங்கி நாளு
நறுமணஞ்செய் சைவத்தே சாதசருத் திரசங்கி தையினன் றுளப்
பெறுபுகழுத் தரபாகங் க்ஷேத்திரகண் டத்துரைக்கப் பெற்ற தாய. (௨௭)

அரிதகிமா வனப்பெருமை யிதுகாறு மொருவருக்கு மறைந்ததில்லை
தெரிவரிய மந்தணமா மெண்ணிறுங்கேட் கினுமெல்லாஞ் சித்தியாகு
முரியவதை யென்குரவன் வாதரா யணமுனிவ னுரைத்தவாறே
பிரியமுற நுமக்குரைப்ப னெல்லைமுத லாகவென்று பேசலுற்றான். (௨௮)

மேவியபா ரதவருடத் தனபாயன் வழிமுதலோர் விளக்கஞ்சான்ற
மாவியலு நீர்நாட்டுச் சையவரை நின்றிழிந்து வருகாவேரி
யோவியதீ வினையாளர் மாத்திரமே பொருளாக்கொண் டுவக்குநீர
தேவியல்கண் மடவாரோ டிந்திரனு மியராடற் கிசையுந்தென்றும். (௨௯)

காணினுங்கேட் பினும்பரிசித் திடினுமொரு துளிதலைமேற் கவினப் பெய்து
பேணினுமோர் திவலையருந் தினுமளவாப் புண்ணியமே பெருக்கத் தக்க
தாணினும்வே யினும்பொலியும் வரையுருட்டி வருபெருக்கத் தானூர் கோயி
லேணினுமே விருகோட்டு மெண்ணில்செறி தரக்கொண்ட வியல தம்மா. (௩௰)

இன்னுமறை யவர்கிரக மிருகோட்டுக் கிருகோட்டி னியையப் பெற்ற
துன்னுபல மலர்த்தருக்கள் வல்லிகளக் கோட்டுறைபோ லொருங்கு கொண்ட
தன்னமுத வியபறவை யளாவுமெழி லுடையதிரு மாகலக் கோடு
மின்னமணி பலவெறியு மலையதுரைக் கடங்காத மேன்மைத் தென்றும். (௩௧)

உரைசெய்திருக் காவிரிக்கு வடதிசையே யிரண்டுகெவி யூதி யெல்லைத்
தரைசெய்தவப் பயனுய வரிதகியா ரணியமென்றுந் தழையா நிற்கும்
விரைசெய்புக ழத்தலத்தை யெவ்வுயிரு முயவாதி விதிதரான் மேரு
வரைசெய்சிலை நம்பெருமா னென்னிலதன் மான்மியத்தை வகுப்பார் யாரே. ()

மேலொருயோ சனைதூரத் தளவையுயர்ந் ததற்கேற்ப மென்பூ வாதி
பாலொருவாக் கிளைகள்பல மென்மேலுந் துவன்றியெங்கும் பரவிப் போர்க்க
நூலொருவா மதியினரும் வியப்புறவின் றிடுங்கடுவை நோக்கு வோர்க்கு
மாலொருவா வினையொருவ ஞானவை ராக்கியமே வந்து கூடும். (௩௩)

அத்தகைய தருவடியி லுலடியிற் பரமசிவ னமர்ந்து ஞான
வித்தகயோ கத்தமவர்வா னவனடிபூ சித்தாதி வேதா தன்னைப்
பொத்தியவி ராசதந்தீர்ந் தவிர்பிரம லோகமே புகுந்து வாழ்ந்து
நித்தியஞா னானந்த முற்றான்சந் திரற்கமல னேரே நின்றான். (௩௪)

என்றுமுனி யுரைத்தருளச் சவுனகனெனப் புலனாமுயி ரவைக்கு மீவா
னன்றுயகி ழத்தலத்தே யத்தருவி னடியோக நயத்தற் கேது
வொன்றுதெரி தரவேண்டு முரைத்தருள வேண்டுமென வுவந்து சூத
னின்றுவினா வியதொடமேற் றுள்ளனவெ லாம்புகல்வே னெனச்சொல் வானே.

நைமிசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅஎ.

## யோகீசப்படலம்.

:o:

அலகில்பல்லுயிர்க்குமின்பமளித்திடுமமலமூர்த்தி
யுலகொருங்கீன்றதாயையொருவியோகிருத்தற்கேது
விலகுறுவண்ணங்கேண்மின்வெய்யபாதகங்கடரு
மிலகுசம்பத்துஞானமிரிதராவாறுசேரும். (க)

நிறைதவவலிமைமிக்காணியமநல்லொழுக்கம்பூண்டான்
முறைபுரிசிருட்டிசெய்வான்முதன்மைசாறக்கனென்பா
னுறைதவப்பெருமையாலேயுலகமுற்றீன்றதாயைப்
பிறைநுதன்மகளாப்பெற்றான்றவத்தின்மேற்பெரியதுண்டோ. (உ)

சதியெனவளர்மாதேவிசங்கரப்பிரானைவேத
விதிமணம்புணர்ந்தபின்புவெய்யதீவினைக்கோட்பட்டு
மதியழிசிதய்புத்தக்கன்மருமகன்றானேயென்று
பதிகழல்வணங்கானானென்பழவினையாரேவெல்வார். (௩)

பின்னரோரிருபத்தேழுபெண்களைப்பெற்றுவானத்
துன்னலூர்ந்தேகுந்திங்கட்குதவிநன்புதல்விமார்சொல்
பன்னருங்கொடுமையாலப்பசுங்கதிர்தேய்கவென்றோர்
முன்னருஞ்சாபமிட்டான்மூர்க்கனைத்தடுப்பார்யாரே. (௪)

கலைகுறைவதுவுங்கஞ்சன்காகுத்தன்முதலோர்தக்கண்
மலைவனென்றஞ்சுமாறுமதிமதித்தான்பாற்சென்று
நிலையருளென்றுதாழ்ந்தானின்மலனாலோனுய்யத்
தலைமிசையமையச்சூடிச்சந்திரமோலியானான். (௫)

மேதகவிந்துக்கீந்தான்வெண்பொடிபூசியென்று
பாதகக்குழிசியாயபடர்மனத்தக்கன்சீறிப்
போதகமுரித்தானீங்கப்புரிவனோர்வேள்வியென்று
காதகப்புழுங்கியாரும்வருகெனக்கழறிவிட்டான். (௬)

தீயவன்விரித்தபோதே திருமறுமார்பன்கஞ்ச
மேயவன்மகர்நவேந்தன்விண்ணவர்திசைகாப்பாளர்
சேயவெங்கதிரோன்றிங்கள்செழுமறையவர்முன்னோர்மண்
மாயவந்தொருங்குமொய்த்தார்வருவதுசற்றுந்தேரார். (எ)

இருடிகள்சிலரைநாடியிருத்துவிக்குகளாத்தாபித்
தருடிரிதிமைத்தக்கன்குண்டமண்டலங்களாதிப்
பொருளமைவேதிசெய்துபோற்றுபகரணம்யாவுந்
தெருடரநாடியாவுஞ்செறிதரச்சேர்த்துக்கொண்டு. (அ)

பொன்புனைவயத்தாள்வாசியிலக்கணப்பொலிவிற்கொண்டு
மின்புனையுலகஞ்சூழவேலையுந்தெரிந்துவிட்டான்
கொன்புனையனையவாசிகுரைகடலுலகஞ்சூழ்ந்து
மன்புனையாகசாலைவந்ததுவலியதாயே. (௯)

புனையிருகதிர்திக்கெட்டும்புரப்பவர்பிரமன்மாயன்
முனைதருவிடுவச்சேனன்முதலியோர்விசுவதேவர்
துனைமருத்துக்கள்வானோர்சொற்றிடாமற்றையோரு
மனைவியரோடும்வந்துமாமகச்சாலைபுக்கார். (௧௦)

முதலவன்மாயையாலேமூடப்பட்டவனேயாகி
விதலைசெய்காலபாசத்தகப்பட்டவெந்தீத்தக்கன்
மதலையந்தொடைப்பிரானோடுமையையும்விளியான்மற்றை
யுதவிசெய்வார்போற்சூழ்ந்தயாரையுமொருங்குபோற்றி. (௧௧)

அவரவர்தகுதிக்கேற்பவாதனமாதிநல்கித்
தவலருங்கேடுசூழ்ந்ததன்மையுள்ளுணரானாகிச்
சிவபிரானிந்தையோடுசிறுவிதிமகந்தொடங்கி
யுவமையில்விதியாற்பாதியாகிமேலுஞற்றும்போது. (௧௨)

ஆயதீவினையாற்றக்கனழைத்திடாதிருப்பதோர்ந்தும்
பாயவான்கருணைத்தேவிபரம்பரன்பாதம்போற்றி
நேயமார்சுருணக்குன்றேநின்மலக்கொழுந்தேநாமும்
போயவண்வருவேமென்றாள்புண்ணியப்பிரானீதோதும் (௧௩)

மானமொன்றின்றியென்னவார்த்தைநீசொன்னாயுன்னைப்
போனசன்மத்தவத்தாற்புதல்வியாப்பெற்றானின்று
ஊனமிக்குறநின்மாயையொருங்குமூடப்பட்டானத்
தீனனைப்பிதாவென்றுள்ளல்செறிதருமடமைப்பாற்றே. (௧௪)

உனக்கொருபிதாவுண்டென்றற்குலகமாதலானீநின்
றனக்கவன்மேலாய்வாஞ்சைதணிதியிங்கிருமற்றன்றோ
சினக்கொடுமூர்க்கனென்னைத்தினந்தொறுநிந்தைசெய்வோன்
மனக்கொடுந்துராசாரன்றூர்ப்புத்தியோமதித்தபாவி. (கரு)

யாரினும்பெரியன்யானேயெனக்கொளுமகம்பாவத்தோன்
சாரினுநின்னையெண்ணுறன்றகாவவமானஞ்செய்வான்
பாரினும்பாரந்தீயபாதகப்பயனையின்னே
காரினுங்கரியக்கூந்தால்கைக்கொள்வான்காண்டிநீயும். (கசு)

பதனழியவன்பால்யானும்வருவதுபாங்காங்கொல்லோ
விதமுறநீயேசேறிவேண்டுமேலென்றகூற
முதல்வனையடியிற்றாழ்ந்துமூவுலகீன்றசெல்வி
சுதமில்பேரருளால்மீட்டுந்தொழுதுவிண்ணப்பஞ்செய்வாள். (கஎ)

பாதகனெனினுமென்னைப்பயந்தவனெனும்பேர்பூண்ட
காதகனுய்யுமாறேகடைக்கணித்தருளவேண்டு
மாதகவுடையாய்சென்றால்வணங்கிடாதிருப்பான்கொல்லோ
நோதகவொழிதிசெல்வோநோக்குடைநுதலாயென்றாள். (கஅ)

என்றலுங்கருணைமூர்த்தியென்னுரைபின்னரோர்வாய்
மன்றலங்குழலாயென்றுமால்விடைமீதிவர்ந்து
பொன்றவில்குலமாதிபொலிதாவுமையாளொடுந்
தன்றிருக்கைலைநீங்கித்தவாவிறற்பூதஞ்சூழ. (ககூ)

வந்தியர்புகழ்ந்துபாடமாமறைதொடர்ந்துசெல்ல
நந்திமுன்னெவரும்போற்றிநயந்துமுன்விரைந்துசெல்ல
முந்தியதொண்டரார்ப்பமுகிலிற்பல்லியங்களோங்கப்
புந்தியிலாததக்கன்புரிமகச்சாலையுற்றான். (உ0)

ஞானக்கண்கொண்டுமோனஞானியருணருஞ்சோதி
யூனக்கண்கொண்டுகாணவுறுதலுங்கொடியபாவி
கானக்கண்மிருகம்போலக்கடுகடுத்தழலநோக்கி
வானக்கணமர்வார்பார்ப்பார்வதனம்பார்த்திஃதுரைப்பான். (உக)

இவனொருதேறிசெத்தாரெலும்பெலாம்பூண்டுகொள்வான்
புவனமுற்றஞ்சும்வெய்யபூதங்கள்சூழவுள்ளான்
சிவமிலாவிடுகாட்டாடுந்திகம்பரன்றுமதஞ்சார்ந்
தவமுறுமிவனைப்போற்றேனென்னவஞ்சாதுகூறி. (உஉ)

சாம்பலைமெய்யிற்பூசுமிவனைத்தன்பதியாக்கொண்ட
தேம்பலைகொளுமருங்குலுமையுமென்சிறுமியல்லள்
சோம்பலைவுடையான்றன்னைத்துதித்திடேனெதிர்சென்றங்கை
கூம்பலைசெய்யேனீருங்கும்பிடீர்துதியீரென்றான். (௨௩)

மறைமுடிவமர்மாதேவன்மான்மியஞ்சிறிதுஞ்சேரான்
கறைமனக்கொடியதீயகலதிவாய்த்தக்கன்வார்த்தை
முறையெனவகத்துட்கொண்டுமூடவேதியர்வானோரு
மிறைவனைப்பாரார்போலத்தலைகவிழ்ந்திருந்தாரன்றே. (௨௪)

சிறுவிதீயுரையுங்கேட்டதேவர்வேதியரிருப்பு
மறுகுணமுடையபெம்மானறிந்துமைவதனநோக்கி
யுறுவனதெரிந்தாய்கொல்லோவென்றனளொருங்குநாணி
மறுவறுவிடையினீங்கிமாமகச்சாலையூடே. (௨௫)

தக்கனிலுறையும்பன்னசாலையையடைந்தாளங்குந்
தொக்கவருரையாடாமலிருந்தனர்துணைவன்வார்த்தைப்
புக்கதுபுந்தியூடுப்பொருசினந்தலைமேற்கொண்டு
நக்கனள்பாவிநீயோதந்தையாநலத்தாயென்று. (௨௬)

புரிதருமகமுநீயும்பொருக்கெனக்கெடுகவென்று
விரிதரவைதுமூலக்கனலைமேலெழுப்பியம்மை
யரியதன்னுருக்கரந்தாள்கண்டவராவாவென்று
பரிதரவுலகமுற்றும்பதறுபுநடுங்கிற்றன்றே. (௨௭)

தேவியங்கடைந்தவாறுமவரவர்செய்தவாறு
மேவியுட்கனலெழுப்பிமேனியைமறைத்தவாறுங்
காவியங்கண்டத்தெண்டோட்கண்ணுதற்சாமிநோக்கி
வாவியவுகாந்தகாலவடவையிற்சினங்கொண்டானே. (௨௮)

பரம்பரன்முனிந்தபோதுபடர்நுதல்விழியினின்றும்
வரம்பறுசெங்கையாவும்வரம்பறுபடைகடாங்க
நிரம்பியவண்டமுற்றுநெறுநெறுநெறுவென்றுக்குத்
திரம்பெருதழியநக்குத்தீவிழிகுருதிபொங்க. (௨௯)

உரவுசால்வடவைச்செந்தீயொருங்குயர்ந்தெழுந்தாலென்னக்
கரவுகூர்பருதிநோக்கிக்கண்வெதுப்படைந்துமூட
விரவுதோளண்டபித்திவெடிபடத்தாக்கமோலி
பரவுவான்றடவவீரபத்திரப்பெருமான்றோன்றி (௩௰)

அட்டகாசஞ்செய்தெய்துமத்திறங்கண்டபோதே
கெட்டனமென்றுவானோரோடினர்கிளர்துழாய்மா
லிட்டமார்வேள்விரூபமிரித்துமானாகியோடப்
பட்டரோர்ந்திருந்தபார்ப்பார்பசியொடுமோடினாரே. (௬௧)

ஓடியபேரையெல்லாமொருங்குறவளைத்துக்கொண்டு
நீடியவாளால்வீசிநிலத்தவர்தலையைத்தள்ளிக்
கூடியகொடுமைத்தக்கனெதிர்சென்றுகொடிற்றின்மேலோர்
பாடியகரத்தாற்றாக்கிப்பல்லெலாஞ்சிதறவீழ்த்தி. (௬௨)

மற்றவன்றலையைவெட்டிவாளெரிக்குணவுநல்கிப்
பொற்றொடிமடந்தைமார்களியாவர்க்கும்பொருந்துதண்ட
முற்றுறவியற்றியாருமுடிதரமுனிந்துசாடிப்
பற்றறயாகசாலைபாழ்படுத்தொழித்தான்சீற்றம். (௬௩)

தேவர்தம்பிரானைநிந்தைசெய்தெவர்வாழவல்லார்
பாவவெந்தீமைத்தக்கன்பட்டபாடிதுகண்டீரே
நாவலர்புகழும்வீரபத்திரநாதன்கொண்ட
கோபவெந்தீயவ்வேள்விக்குண்டத்தீயொடுமாய்ந்தன்றே. (௬௪)

கண்ணிலாத்தக்கன்செய்தகடுந்தழல்வேள்விகாத்த
வெண்ணிலாவயன்மாலாதியெலிப்படையனைத்துந்தோல்வி
நண்ணிலாவலிசால்வீரபத்திரநம்பனென்னு
முண்ணிலாவொருமாநாகமுயிர்த்திடக்கெட்டதன்றே. (௬௫)

சிலர்பரம்பிரமமென்றுசெப்பிடப்பட்டமாலுங்
கலர்தொழிறலைமேற்கொண்டகருண்மனத்தக்கன்மாட்டே
யலர்தருமெச்சனாய்ப்புக்கறப்புண்டான்றலையென்றான்மெய்
புலர்தவில்சம்புமாயைபோக்கவல்லாரும்யாரே. (௬௬)

உலகெலாம்படைக்குமாற்றலொருங்குறப்பெற்றுமுற்ற
வலகில்வேதங்களோர்ந்துமலரணைப்புத்தேளந்தோ
கலதிவாய்த்தக்கன்வேள்விகலந்துயிரிழந்தானென்றால்
விலகுறாவூழினாற்றல்விலக்குவாரொருவருண்டோ. (௬௭)

நவையிருடனையுமுடக்கதிரவனயனந்தோற்றான்
கவையழல்விழுங்குமாறுதிரட்டியகையிழந்தான்
செவையுறத்தாமொன்றெண்ணத்தெய்வமொன்றெண்ணிற்றென்ப
தவையவிக்களத்துற்றார்பாலறிந்தனமன்றுமாதோ. (௬௮)

சிவபரஞ்சுடரைநிந்தைசெய்தமாபாவிநல்கு
மவமிகுபுலாவிறேடுதக்கனையவாவிப்புக்க
தவமறையோருமெங்கடம்பிரான்வலிமையோர்ந்து
குவலயத்திடைமுட்டுண்டுகுனிப்பவர்த்தமையொத்தாரே. (௩௯)

தண்ணியவருளால்யாகசாலையின்மாண்டோர்க்கெல்லா
நண்ணியவுயிரைநல்கிநகுவிடையுகைத்தெழுந்து
புண்ணியஞ்சோழநாட்டிற்பொலிதலாலுயிர்கடோறு
மண்ணியபெருமானசொற்றவரிதுவினைதையுற்றான். (௪௰)

அரிதகிப்பெருமைநம்மாலறைதராமுற்றுங்கொல்லோ
விரிதளிரிலையரும்புமெல்லியபூவிளைவகாய்
பரிதருகாய்முன்யாவும்பரித்திடுசோடுதாழ்ந்து
பிரியநன்னிழல்வாய்ந்துபிறங்குவவெந்தநாளும். (௪௧)

விரிந்தவத்தருவைக்கண்டாலாதியும்வியாதியும்போம்
புரிந்தமாபாவமெல்லாம்பொறியுற்பட்டபஞ்சா
மரிந்தபாசப்பிராணுமத்தருவளமைமுற்றுந்
தெரிந்தவனுகியன்னதருவின்கீழிருந்தல்செய்வான். (௪௨)

அனையமாதருவினீழலளவில்பல்லுயிருண்மேன்மை
தனையவாமுயிர்களின்பஞ்சார்தரும்பொருட்டுவாச
நனையவாமலர்மேலாற்குநாகணைப்பள்ளியாற்கும்
வினையமாமறைக்குமெட்டாவிமலன்யோகத்திருந்தான். (௪௩)

சங்கமேயக்கங்கூர்மஞ்சுவத்திகஞ்சுகபூரந்
சிங்கங்கோமுகம்வாசந்திருந்தியகளபம்வீரந்
துங்கமார்முசலந்தூபபத்மங்குக்குடமென்றொன்று
மங்கமாரிடபம்வாய்ந்தகபிலவாசனமுமைந்தே. (௪௪)

கடிதரவிலாவிலற்றுளெய்வெவ்காலங்களைக்கெட்
படியுறவேனைமேமாவப்படியுறவினிதிருந்து
முடிவில்பல்லுயிர்க்குமின்பமுற்றிடயோகஞ்செய்தா
னடிநடுமுடிவிலாதாறையிரவருடமம்மா. (௪௫)

தன்னையேயுணர்ந்தயோகந்தவாதுசெய்திணிதிருக்கு
மன்னையேயனையான்கண்ணிலானந்தவருவிவாரப்
பொன்னைமேபய்வடதிக்கோடிப்பொங்குமோர்நதியேயாய
தென்னையேய்தருமாஞானநதியெனவிசைப்பர்நாமம். (௪௬)

அரிதகிக்கொருகுரோசவளவையினேடுமெந்த
விரிபுனல்யாற்றுமூழ்கில்வெய்யபாதகங்கடீரு
முரியமெய்ஞ்ஞானமுண்டாமுள்ளியவினைதரு மெய்தும்
பிரியமுற்றதின்மூழ்காதார்பிறவியெப்பிறவிமாதோ. (௪௭)

அன்னமாவனத்திறைஞுமரியொடுசரியுமாறுங்
கொன்னவிலுகிர்விராயகொடுவரிமாவுமற்று
மென்னவும்விரோதமின்றியினிதுறநட்புவாய்ந்து
மன்னவாழ்ந்திருக்குமென்னினின்மான்மியஞ்சிறியதாமோ. (௪௮)

போற்றுசீர்நாடுசெய்தபுண்ணியப்பயனென்றியாருந்
தோற்றுமவ்வனத்துமேவிச்சுபஞ்சேர்தியோகிருந்து
சாற்றும்யோகீசனுன்றவதிலிக்கதைவேட்போரை
யேற்றுமாற்சிவலோகத்திலென்பதற்கையமென்னே. (௪௯)

போதுசெய்கொன்றைமாலைப்புண்ணியப்பிரான்யோகன்றி
யாதுசெய்தாலுமான்மாநிமித்தமென்றிசைக்கும்வேதந்
தாதுசெய்சடையீர்நாளுந்தனக்கெனவொன்றும்வேண்டான்
மாதுசெய்பாகத்தன்னமறைமுதற்பெருமான்றானே. (௫௰)

யோகேசப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௨௱௭.

---

## காமனெழுச்சிப்படலம்.

தக்கன்மகச்சாலையகஞ்சார்ந்துதிருவுருக்கரந்த
திக்களவுபுகழுமையாள்சேணளக்குமிமவரைக்கு
மிக்ககுணமேனைக்குமேதகுபன்றனியற்று
பொக்கமறுபெருந்தவத்தாற்போந்தொருபுத்திரியானாள். (௧)

பிறவாதுபிறந்துபதுமத்தமரும்பெண்ணமுதை
மறவாதுநோன்புழந்தமலையானுமேனையுங்கண்
டிறவாதமகிழ்ச்சியெழவெடுத்தணைத்துமோந்துபொரு
ளுறவாதுலரையடைந்ததொக்குமெனவளர்த்தனரால். (௨)

பிறைபொருவவளருமொருபெண்ணரசேழாண்டளவு
முறைசிறுவீடியற்றிடுதல்முதற்பலவாடலினமர்ந்து
மறைவரியகவுமாரமருவுதலுங்கைலாயத்
திறையவனைமணம் [illegible] தனைநணியியற்றின [illegible] (௩)

கறையின்மதியெனமேனிகதிர்த்திடவெண்ணீறணிந்து
நிறைதருகண்மணிபூண்டுநிலவுமோரிடத்தமர்ந்தே
யிறையவனெப்படியமர்வானிறைவியுமப்படியென்றே
மறைமொழியுமதற்கேற்பமாதேவிதவத்தமர்ந்தாள். (௫)

வன்புமலிபரிதகிமாவனத்தமரும்பெருமானு
ரன்புமலிதேவிபிரிவாற்றாமேயடைவார்போ
லென்புதெரிமேனிமுடியிருந்நிறைபோல்வளைய
மின்புரிவெண்ணீறிலகவிருத்தவுருக்கொண்டணைந்தார். (௬)

பனிவரையிற்றவத்திருக்கும்பார்ப்பதிமுன்னெய்துதலும்
புனிதைமிகவுபசரித்துப்போந்தநீர்யாவரெனத்
தனிமுதல்வர்கடுவனம்வாழ்தவயோகர்நாமடந்தா
யினியதவநீபுரிதற்கேதுநுவன்றிடுகென்றார். (௭)

வேதமுடிவுந்தெரியாவிருத்தருரைகேட்டருளி
யேதமறவெவ்வுலகுமீன்றநாயகிபுகல்வா
ளோதநெடுங்கடல்விடமுண்டபிரான்றனைமணப்பான்
காதன்மிகத்தவஞ்செய்வேன்கருணையுறுமளவென்றாள். (௮)

பண்ணமையவினிதுநவில்பார்ப்பதிசொற்கேட்டுநுதற்
கண்ணமையக்காட்டாதவிருத்தர்கனிவாய்மயிலே
புண்ணமையமனந்தவத்துப்பொருந்துவதுதகாதாலு
னெண்ணமையவிப்பொழுதேயென்னைமணம்புணர்ந்திடுவாய். (௮)

பற்றுசுகநுகர்வதற்காம்பருவத்தேநோற்றுடம்பு
வற்றவதுதகுங்கொல்லோவென்றுரைக்கமாதேவி
சற்றுமனமஞ்சாமலென்சொன்னாய்தகவில்லாய்
முற்றுவதுதெரியாயப்பாலகலென்றனண்முனிந்தே. (௯)

தேவியார்முனிவுணர்ந்துமுதிராததிருவிருத்தர்
மேவியாயிரங்கோடியிளங்கதிர்கள்விளங்கியெனப்
பாவியாருணராத்தம்முருக்காட்டப்பயந்தெழுந்தே
யாவியாரடைந்தாரென்றஞ்சலிசெய்தடிதொழுது. (௧௦)

வேறு.

மருவுயோகியர்வந்திக்குமாபரம்பொருளே
யொருவுறாதயனரிமுதற்பலர்தொழுமொருவா
வுருவமோடருவருவுருவொன்பதுமுடையாய்
பொருவுதீர்பழம்பசுபதிநின்னடிபோற்றி. (௧௧)

# திருக்குறுக்கைப்புராணம்.

அனாதியாருயிர்க்கருளினாற்றனுமுதலளிப்போ
யனாதியாணவமறைப்பறவறம்பலவமைப்போ
யனாதியாணவக்கலப்பினின்னடிக்கலப்பருள்வோ
யனாதிமுத்தநின்பொன்னடியடியனேனடைந்தேன். (௧௨)

ஞானஞாதிருஞேயமூன்றுளவெனநாட்டன்
ஞானஞாதிருஞேயமூன்றிலையெனநவிறன்
ஞானநாயகமென்பவர்களவினாநண்ணு
ஞானநாயகநாடொறுநின்புகழ்நவில்வேன். (௧௩)

வருதிவாகரன்மதியழல்விழியெனவைத்தாய்
பொருதியாசைதீர்ந்தறிதாமழுப்படைப்புராணா
கருதியாதரிப்பாருளங்காணிகொள்பரமா
சுருதிநாயகாநின்றிருவடித்துணைதொழுவேன். (௧௪)

என்றுமுள்ளவெவ்வகைப்பொருள்கட்குமிறைவ
நன்றுதீதிரண்டகன்றபேரொளியுருநயவ
கொன்றுமும்மலங்குலவவின்பருள்பெருங்குரவ
வொன்றுபத்துநூறாயிரம்வந்தனமுனக்கே. (௧௫)

பொலிதருந்துடிபடைத்திடவபயமேபுரக்க
மலிதருந்தழன்மாய்த்திடவூன்றுதாண்மயக்க
வொலிதருஞ்சிலம்பெடுத்ததாளருளயிக்குவப்பார்
கலிதரும்பொதுநவினடம்பொலிகவெக்காலும். (௧௬)

என்றுதோத்திரமியம்பியதேவியையுவந்து
கன்றுமான்மழுக்கையினனருந்தவக்கரும்பே
நன்றுநின்மணநவிற்றுவாம்பின்னெனநவின்றே
யொன்றுமாறறிதகிரிழன்முன்புபோலுறைந்தான். (௧௭)

நிறைந்தநாயகனின்மலக்காட்சிதந்தருளி
மறைந்தகாலையின்மகிழ்ந்துதன்மனைபுகுந்தனையா
ளறைந்தவாசகநினைந்திருந்தனள்பரையரன்முன்
னுறைந்தவாறமர்ந்தானுயிர்க்கின்பமீந்தார. (௧௮)

உலககாரணராகியவிருவருமொன்றார்
விலகயாவரும்போகமில்லாமலேமெலிந்தா
ரிலகவீதுணர்ந்தும்பரம்வேறெனவிசைக்குங்
கலகநூத்தைவாய்மூடரும்வாழ்கவெக்காலும். (௧௯)

பொன்றருவனப்பிளமுலைமங்கையர்போக
மென்றமேவுவோம்யாவருந்துறவியொதிருந்தோங்
குன்றவார்சிலைகோட்டியகுழகனென்றருளு
மொன்றுமாறெனயாவருமுளங்கவலுறுவார். (௨௰)

வானநாடருமற்றவர்க்கிறைவனுமலர்மே
லானநான்முகத்தண்ணலுநறவிரைத்துளபக்
கானமாலினைக்கடவுளும்பிறருமோர்காவற்
றானமெய்தினரிருந்தனர்சகுந்தியிற்சூழ்வார். (௨௧

வேறு

நாரகன்மனத்துச்சூரனையரிமுகாசகன்வெய்ய
தாரகன்முதலாயுள்ளதானவர்கொடுமையாலே
பாரகமறையோர்வேள்விபண்ணுதலாதியற்றார்
காரகமறல்கொளாதுகழிந்தனவுலகஞ்சாய்பும (௨௨)

வானகநாடுபுகுவயங்குபல்பொருள்களோடு
தேனகவளர்பூங்கூந்தற்றிருவனாதமையுங்கொண்டா
ரூனகவொளிர்வாளோச்சியுலகெலாமொருங்குவென்றார்
கானகம்புகுந்துவாழக்கடவதோகடவுளாரே. (௨௩)

காட்டினும்வாழவொட்டார்கானமிசைவிழுந்தபோது
நாட்டினும்வாழவொட்டார்நாமினிப்புகுவதெங்கே
யேட்டினுமெழுதமுற்றாவிடாபலசெய்வார்மெய்யாங்
கூட்டினும்வாழவொட்டாகொல்லவமாட்டார்நாளும். (௨௪)

மாற்றலர்மடவார்வாழுமனைதொறம்புகுந்துநாளு
மாற்றலமாகியாற்றலலகிடலாதியாவுஞ்
சாற்றருங்கடல்வாய்மீனநதடியவங்கற்றுக்கொண்டோந்
தேற்றநாஞ்சீத்தையானோந்தேவராயிருந்துகெட்டோம் (௨௫)

காரணமெவனோமாதர்காமமெட்டுணையுமில்லை
மாரனெங்கொளித்தான்கொலோமாண்டுதான்போய்விட்டானோ
தீரவொன்றுணர்ரோமுண்மைசெப்பிடவேண்டுமென்னச்
சாரருமதிநூல்வல்லபொன்னிதுசாற்றுவானே. (௨௬)

வரத்தினன்மிக்கோரானாவாள்வலியவுணர்யாரும்
பரத்தினுலுயர்ந்தவாதிபகவனையிகழ்ந்துகீழ்மை
யுரத்தினல்வேள்விசெய்தானுடன்கலந்திருந்ததோடத்
திரத்தினலடைந்ததாலித்தீங்கெலாமென்றுதோமின். (௨௭)

# திருக்குறுங்கைப்புராணம்.

கடுவனத்தினிதுமேவுங்கண்ணுதல்யோகநீங்கி
வடிவமிக்கடுங்கட்டாயைமணம்புணர்ந்தருள்வானாயி
னெடுமுடியாறுதாங்குநிகரறுமழுவொன்றுண்டாங்
கொடுமையென்பனவெலாமக்குழலியாலொழியுங்கண்டீர். (௨௮)

அறுமுகக்கடவுடோன்றுமளவுமோரின்பமில்லை
யுறுபுகழ்ப்பெருமான்யோகமொழிதருமளவுநாமோர்
நறுமலர்க்குழலினாரைநச்சிடுநசையுமில்லை
மறுவிலப்பெருமான்யோகமாற்றிடுவாருமில்லை. (௨௯)

அகளனானந்தனித்தனவிகாரனஞ்சலன்ற
னாசளபாதத்தையுள்வாருள்ளேயொளியாய்நிற்போன்
சகளநாமறிதலெல்லாத்தற்பரனனையான்வெற்பின்
மகளவாவுதலெவ்வாறுவாய்திறந்துரைமினென்றான். (௩0)

உற்றபொன்மொழிகேட்டின்னேயொன்றுசெய்திடலாமென்று
கொற்றவொள்வயிரவேலான்கொடியிடையிரதியோடு
மற்றருதிணிதோண்மாரன்வருகெனநினைந்தான்வாகை
பெற்றவில்லிரதியோடுவந்தனன்பிறங்குமாரன். (௩௧)

வந்தவேள்கையைப்பற்றிவச்சிரபாணியென்பான்
முந்தவேமுகமன்கூறிமுழுமணிப்பீடத்தேற்றி
நந்தவேழுலகமுற்றுநகைமலரொன்றால்வாகை
சிந்தவேவென்றுவாகைதிருத்தியதிண்டோளாயே. (௩௨)

பகைதபவுயர்த்தமீனப்பதாகையாய்துறவுபூண்டார்
மிகைதபவெடுத்துவாங்கும்வேழவெஞ்சிலையாய்மானார்
நகைதபவெழுந்துபொங்குநல்லழகுடையாயெங்க
டகைதபவந்தவாட்டந்தவிர்த்தருள்செயவல்லோயே. (௩௩)

என்றுவானாடன்கூறுமிம்மொழியுணர்ந்துதென்றற்
கன்றுமேலுலவுமாரன்கருதியதென்னையென்றா
னின்றுநீகடுமாகானத்தெய்தியோகிருக்குஞ்சோதி
சென்றுதேவியைச்சேர்பாக்குச்செய்திடவேண்டுமென்றான். (௩௪)

காரவாமூர்த்திவார்த்தைகேட்டலுங்கலங்கியந்தோ
மாரனாயிருக்குமென்னைமாரகனாக்கநீவிர்
தீரவேயெண்ணங்கொண்டீர்செப்பியவிதுநன்றாமோ
பாரவாவறிவீர்நீர்பின்படுவதுதெரிந்திலீரோ. (௩௫)

சிங்கத்தையொன்றுசெய்தல்சிறுமுயற்குட்டியேயோ
துங்கத்தையுடையபெம்மான்சுவேச்சையனல்லன்கொல்லோ
வங்கத்தையுடையனேனுமயனரிமுதனைப்போலோ
பங்கத்தையெனக்குச்செய்வனெண்ணியபரிசுநன்றே. (௧௬)

நாறுபட்டலருங்கொன்றைநாயகனெதிரேயுள்ள
மாறுபட்டவன்போய்த்தப்பிவருபவன்விழித்துப்பார்த்தா
னீறுபட்டுலகமெல்லாமிடித்துட்போமெவாசச்
சேறுபட்டெழுந்ததோளிசெப்பியவார்த்தையென்னே. (௧௭)

வரதன்யோகிருந்தநாட்டொட்டிதுவரைவனப்புவாய்ந்த
விரதியுநானுங்கூட்டமெய்திலமினியென்வேண்டும்
விரவுநீரடுத்துவேண்டில்வேண்டியபெறுவீரின்றேற்
பரவியேத்தெடுப்பீரென்றுபகர்ந்தனன்பகழிமாரன். (௧௮)

மாரவேள்புகன்றவார்த்தைவரைப்பகைகேட்டுரைப்பான்
வீரவேளுதிக்குமாறும்வெய்யவர்விளியுமாறு
மாரவெய்ததோளாரகொங்கையாமெலாமணையுமாறுஞ்
சாரவேயுணர்ந்துசொற்றேன்றடுப்பதுதருமமன்றே. (௧௯)

உன்னையானுணரேன்கொல்லோவுன்வலியுரைக்கப்போமோ
வென்னையாயிரங்கண்மேவியிருக்கைவைத்தவனீதானே
முன்னைமால்பிருந்தைவீந்துமுதுசுடுகாட்டுச்சாமப
றன்னைநீங்காதுவைகச்சரந்தொடுத்தவனும்யாரே. (௨௦)

திசைமுகப்புத்தேளென்பான்றிலோத்தமையுருவங்கண்டு
வசையுமெண்ணாதுமாழ்கவாளிதொட்டவனீதானே
யசைவறுயோகத்தின்றுகடுவெடியமர்வானன்று
நசையின்மோகினியைச்சேரநாட்டினான்வேறுளானோ. (௨௧)

கதுமெனக்கரும்புகோட்டிக்கருஞ்சுரும்பிரங்கப்பூட்டி
மதுமலரொன்றுநாட்டிமாதேவன்யோகமோட்டி
விதுமுகத்துமையைக்கூட்டிவெருவெமர்துயரம்வீட்டி
முதுபிரதாபங்காட்டியிடாததென்மொழிதியென்றான். (௨௨)

என்றுவானுடன்சொற்றவார்த்தையையிதமாக்கொண்டு
குன்றுநேர்புயங்கள்வீங்கநிறநிமிர்த்தெழுந்துகூறு
மொன்றுமெண்ணலிரின்றேசென்றுரைத்தவாமுடிப்பேனென்றான்
கன்றுமூழடுத்தபோதுகடக்கவல்லாரும்யாரே. (௨௩)

கருப்புவிற்சம்பராரிகருத்துடன்பட்டபோதே
பொருப்பிறகரிந்தபுத்தேண்முதலியருவகைபொங்க
விருப்புறுமமூரமூட்டிவிரைசெழுசேறபூசி
யருப்புமென்பிணையல்சூட்டிப்பாகடையமையாலிசி. (சச)

நருமணிமோலிவாகுவலயநற்குண்டலந்தேர்
மிகுமணிப்பதக்கமாரமிவைமுதனல்கியின்னே
புகுகவெனத்தூநாதன்பொருந்துயோகொழித்துமேன்மேன்
மிகுபுகழ்கோடியென்றுவிடைகொடுத்தனர்வானுடர். (சரு)

போற்றிமெய்ஞ்ஞானமோம்பும்புண்ணியமுனிவர்வீறுந்
தோற்றியவயன்மாலாதிசுராசுரர்வீறுமங்கை
யாற்றியவாளியொன்றாலலைக்குமெற்கரிதென்னென்று
சாற்றியுண்மதர்த்தெழுந்தான்றடுத்தனளிரதிவந்து. (சசு)

இறைவவென்னினோங்கெழுந்தாயிமையவர்வார்த்தைகேட்டு
மறையவனெமொலாதிவானவர்மங்கைமாரோ
மிறையொருநாளுஞ்சண்டமேவுமங்கலமிழந்த
ணிறைதரவெண்ணுதொன்றைநிகழ்த்துதல்பொல்லாங்கன்றே (சஎ)

எழுபரித்தேரென்றூழையிருளுறவிழுங்கினாலுங்
கொழுவியவிருப்புத்தூணைக்குறுஞ்சிதலரித்திட்டாலும்
பழுதறுதழலைவெண்ணெய்ப்பாவைசென்றடர்த்திட்டாலுந்
தொழுதகுபிரானைநின்கைத்தொடமலர்க்கணையென்செய்யும். (சஅ)

கண்ணுதற்பிரான்மேற்சேறல்காரியமன்றுசொன்னே
னெண்ணுதல்மொழியென்றெள்ளேலுயிருணேயின்றியில்லே
னெண்ணுதல்செய்துகொண்டவெழுச்சியைத்தவிரென்றுண்மெய
மண்ணுதல்விழிநீர்செய்யவருந்திமாழாந்துசோர்வாள். (சகூ)

மாதராய்தடுத்தல்செய்யேல்வானவர்வருந்துகின்றார்
காதலாலுலகமூன்றுங்கலங்கவோர்துரும்புசெய்வே
ஞதலால்வென்றுமீள்வேனஞ்சலையஞ்சேலென்று
கோதமேன்மேலும்பொங்கக்கொண்டனன்வருவதோரான். (ருo)

சோரந்துவீழ்கயலும்பாரான்றேளிடந்துடிப்பதோரா
னோர்ந்துதன்றேவிமாழ்கிநிகழ்த்தியமொழியுங்கேளா
ஞர்ந்துசூழ்மடமையாலேயாயிரமறையுந்தேட
வார்ந்துசெல்பொருண்மேற்செல்வான்மதர்த்தெழுந்தனன்வெங்காம

காமனெழுச்சிப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஅஅ.

# காமதகனப்படலம்.

———:():———

எங்கெழிலமைந்தபுலோமசைபணைத்தவிளமுலையுழுதழுதழுக்க
நீங்தருங்களிப்பின்முழுகுதிண்புயத்தோனெட்டிசத்தாமரையமர்வோன்
மாந்தளிர்மருட்டு † மாமைசான்மேனிமாமக ‡ னிறத்திறேன்முதலோர்
போந்திடவுரைத்தவார்த்தையேற்றிரதிப்பூவையோடெழுந்தவிற்காமன் (௧)

மணிகெழுமகுடங்குண்டலம்வாகுவலயமொண்கடகமாரணி
யணிகெழுமற்றையாவுமொண்கதிரினவிர்தரக்கடன்முரசார்ப்பப்
பணிகெழுமதியவெண்குடைநிழற்றப்படர்தரு * துணங்கறலென்றுந்
திணிகெழுகரடக்கடாக்களிறொலிப்பச்செழுங்குயிற்காகளமுழங்க. (௨)

பைங்கிளிப்புரவிபற்பலமொய்ப்பப்படர்சுவையமுதமூற்றிருக்குஞ்
செங்கனித்துவர்வாய்க்கருங்குழன்மடவார்சேனைபெருவகையிற்சூழத்
தங்குமெல்விரையார்பாகடையிரதிதளிர்க்கரமுதவினைய்போற்றத்
திங்களஞ்சடையோற்பொருவதுகருதித்திரைக்கடல்சூழ்புவியடைந்தான் (௩)

சேய்மையனேனுமணிமையனேனுந்திருந்துறவிருந்துபத்திமைசெ
யாய்மையின்விருத்தராயினும்பாலராயினுமவர்க்கருள்சுரப்போன்
வாய்மையினியமன்வானவரீசன்மறையுணர்ந்தவர்க்குமோர்வரியான்
றூய்மையசருவகாரணனமலசச்சிதானந்தநிட்களங்கன். (௪)

விரிதருகருணைப்பெருந்திருவுருவன்மேதகுகுக்குமரூபன்
புரிதருசுகுணன்றிரிகுணாதீதன்போற்றுபநிடதங்களுரைத்துப்
பரிதருமேன்மைத்திப்பியநாமன்படரொளிப்பிழம்பெனப்பொலிவோன்
வரிதருகடுக்கைமாலையானமரும்வளவரிதகிவனம்புகுந்தான். (௫)

சீதளமந்தமாருதமுலாவச்செய்யபூங்கொடிபலவசையப்
போதளவமரும்வண்டர்பாணிசைப்பப்பொலிதருபசுமயிலகவ
மீதளவெழுந்தமாங்குயில்கூவமேதகுதுறவுபூண்டவருங்
காதளவோடுகருங்கணார்மயலேகருதுமவ்வனங்கண்டுமகிழ்ந்தான். (௬)

மலர்தொறுமறுகாலுழுதுழுதுழக்கமகரந்தம்வீழ்ந்துகட்டழுகு
புலர்தவின்மதவேண்மேனியைமறைத்தல்புண்ணியப்பிரானெடுமெதிர்த்தே
யுலர்தருவானென்றுணர்ந்துபைஞ்சோலையொண்மலர்தமக்கிறையவனை
யலர்தருமளியாலமைந்தகாப்பியற்றுமத்தகுதிறம்பொருஉமாதோ. (௭)

---

† மாமை-அழகு. ‡ நிறம்-மார்பு. * துணங்கறல்-இருள்.

கிஞ்சுகம்பலாசுபல்லிடங்தோறுங்கெழுவுறப்பூத்தெனசிறப்ப
நஞ்சுகொண்டமுதுசெய்ததையுளத்துநாடியோகீசன்முன்னின்று
விஞ்சுநின்வாளிதொடுத்திடேன்மதனுவெள்ளறிவாற்றொடுத்திடிலுன்
மஞ்சுசெய்மேனியழல்கொளவெமைப்போல்வாயெனத்தெரித்திடன்மானும்.(௮)

அரிபுகிவனத்திலையவெம்பிணையையரிதகியென்றவந்தடைவார்
பெரியவர்சிறியர்போகமேவேட்டுப்பெரிதுவந்தடைவர்தம்மேனி
யெரியழல்விருந்துசெய்திடவுள்ளத்தெண்ணிவந்தடைந்தனனென்றாற்
றெரிவருமதனைப்பெரியவனென்கோசிறியவனென்கோவெதுபுகல்வேன். (௯)

கறைமிடற்றிறைமேற்கருப்புவில்வளைத்துக்கணைமலரொன்றுதொட்டிடுவான்
மிறையறமதவேள்செல்வனேவஞ்சிமீள்வனேவென்றுணர்ந்திடுவான்
குறையுறுதேவர்பற்பலர்வந்துகூடிநின்றுணர்ந்தனரனைய
முறையுறுமிடத்தைத்தேவரூரென்றுமொழிவர்முற்றுணர்ந்தயாவருமே. (௧௦)

அங்கணனளவாவருட்டிருவுருவணரிதகிவனத்தமர்நெற்றிச்
செங்கணன்றிகழ்யோகீசன்மேல்வாளிசெலுத்துவான்றிருந்திழைமடவார்
தங்கணஞ்சூழக்கங்கணம்புதிதுதரித்தனன்மாரனவ்விடத்தைக்
கங்கணம்புத்தூரெனப்புகலுவரக்காரணம்பற்றிமண்ணுலகோர் (௧௧)

அங்குநின்றெழுந்தேயரிதகிவிருக்கமதற்கொருகுரோசத்தினெல்லை
தங்குமீசானதிசையினையடைந்துதழைகழைகுழைதரவாங்கிப்
பொங்குநாண்பூட்டியியலமண்ணுான்றிப்புந்தியெண்பலகொடுநின்று
னெங்குமவ்விடத்தைவில்லியநல்லூரென்றெடுத்துரைசெயுநாளும். (௧௨)

எதிர்முகநின்றுபொருவதற்கஞ்சியெய்துறமேற்றிசையடைவா
னதிர்பொலங்கழற்கான்மாரவேள்வடபாலடைந்துகால்வளைத்துவில்வீரச்
சதிரதுதெரிப்பானின்றனனனையதவலருவளமலியிடத்தை
யுதிர்தவில்புகழ்சால்கால்வளைமேடென்றுலகெடுத்துரைத்திடுமின்னும். (௧௩)

அத்தகையிடமுமகன்றுமேற்றிசைபோயண்ணலார்க்கபிமுகமல்லா
வித்தகையிடமேவாளிநாங்தொடுதற்கியலிடமென்றுளத்துணர்ந்து
சித்தமஞ்சாதுபஞ்சபாணங்கடெரிந்தனனனையகாரணத்தா
லொத்தமாபஞ்சபாணநல்லூரென்றுலகெடுத்தியம்புமவ்விடத்தை. (௧௪)

வளமுறத்தளிர்த்துப்பூத்தவணின்றமாந்தருவொன்றனதடியே
யுளமுறமேவியுயிர்க்குயிராயவொருவனைப்பொருதொழில்பூண்டு
களமுறநின்றோன்கருப்புவில்வாங்கிக்கடுப்புறக்குணத்தொனியெழுப்பித்
தளமுறப்பொலியும்விகசிதமமைந்ததாமரைமலர்தொடுத்தெய்தான். (௧௫)

எய்தசெங்கமலக்கணைபொறுந்தெய்வமென்செய்வாமேழையேமின்று
செய்தவர்மதிக்குஞ்சிவபிரான்பாலுஞ்செல்லுமாறுபட்டடந்தோ
வெய்தமைதிமையுறுதன்மெய்யென்றுவிதிர்விதிர்த்துஞ்சபுசென்று
பொய்தருமுளத்துப்புகாதவப்பெருமான்புறத்துறப்பட்டதையன்றே. (கசு)

பட்டவப்போழ்தேயுணர்த்திடாதெவையும்பளகறவுணர்தரவல்ல
சிட்டனுள்விருப்புவெறுப்பிலனேனுந்தெரிந்தனனதியோடந்தத்
துட்டனுளகத்தையழித்தருள்செயவுங்குழலகுயிலொலாமிதனை
யொட்டகன்குணர்ந்துபிறப்பறுத்துயவுமுறுபெருங்கருணையாலெண்ணி. (கஎ)

பூருவமுகமாயிருந்ததுதீர்ந்துபொருந்துபச்சிமமுகமாகி
நேருவதொன்றிற்குறுங்கையரும்பநின்மலன்மாரனைநோக்கி
யோருவசிறிதுமுணர்தராய்நின்னைவொன்றினுன்மபங்குநந்தன்மை
பாருவவென்றுதகுவகைசிறிதுபாலலோசனந்திறந்தனனே (கஅ)

திறக்குமுனஞ்சிநடுங்குபுபதறித்தென்றிசையோடினனங்கே
சிறக்குமெம்பெருமானுதல்விழிச்செந்தீநேருறச்சென்றுசுட்டிடலு
நறக்குலமலரேவுடையவனழகுநயத்தகுமேனியுமெரிந்து
பறக்குமொண்கொடியுமிரதமுங்கரியும்பரியுமற்றெரிந்தனமாதோ. (க௯)

தென்றிசையடைந்துசோர்ந்துவீழிடத்தைச்செப்புவர்சோர்ந்தமங்கலமென்
றன்றியுங்கூற்றுவதியிடங்கூற்றுவாழ்க்கையென்றுயதுபின்னுங்
கன்றிமெய்வெதும்பிநீறுபட்டழிந்துகழிந்தவோரிடத்தினையின்னுங்
குன்றுதலிலாதுசான்றதாநீற்றவக்குட்டமென்றுரைத்திடுமுலகே. (உ0)

சாக்கியர்பலநாளெறிந்தகல்லெறியுந்தன்றிருமேனியேற்றருணம்
பாக்கியப்பயனுந்தம்பிரான்மதவேள்படர்ந்தொருநாளெறிமதுவந்
தேக்கியகமலமலரெறிபொறானாய்ச்சிவந்தவனுருப்பொடிபடுத்தா
னாக்கியவன்பிற்சிறந்ததொன்றுண்டோவயனரிமுதற்பலவுயிர்க்கும். (உக)

அரியயன்முதலோரேவலிற்போந்தவைங்கணைக்கிழவனையுலகந்
தெரியவோர்தென்கீழ்த்திசைக்கிழவனுக்குத்திப்பியவிருந்துசெய்தனைய
பிரியமுற்றுணர்வாரரிதகிவனத்துப்பிறங்குயோகீசனையன்றி
யுரியவான்பிரமம்வேறுமொன்றுண்டென்றுணர்வரோமறவியினேனும். (உஉ)

பொங்குகற்பகத்தார்புனைமணிமோலிப்புலவரைமற்றவர்க்கிறையைச்
சங்குசக்கரக்கைத்திருநெடுமாலைச்சததளகமலமேன்முனியைக்
கொங்குமிக்கெழுமோர்வாளியானிலைமைகுலைதரவருத்துமோர்தெய்வ
மெங்குமுற்றெருளிர்வோனுதல்விழித்தழலாலெரிந்துவெண்சாம்பராகியதே (உங)

புன்மதந்துலோகாயதமெழின்மடவார்போகமேபொருளெனக்கொண்டு
துன்மதத்ததுநல்லிறையும்வேறென்றேதுணிதரலொழிந்துளஞ்சமழ்ப்ப
மன்மதத்தெய்வக்கருப்புவிற்குழைத்துமலர்க்கணையொன்றுறவிடுத்துப்
பன்மதத்தவரும்பாரணையேவியப்பப்பட்டதுசாம்பரியிற்றே. (௨௪)

தனியெழின்மாரன்விடுத்ததுமுளரிதம்பிரான்விடுத்ததுமுளரி
பனிமதிக்குடையோனெண்ணமுமருளேபரம்பரனெண்ணமுமருளே
கனிவருமதவேணீறுடைமெய்யன்கடவுளுநீறுடைமெய்யன்
வனிதையோர்பாகத்தெம்பிரான்றனக்குமனோபவன்றோற்றிலன்போலும். (௨௫)

அத்திரங்காத்திற்கொடுபொருமதனையத்திரமடைந்தனன்மீட்டும்
புத்திரனாயோகவானந்தப்புணரிபாற்றோணியையிழுத்துச்
சத்திரமதியான்பெருஞ்சுழிப்புணரிதன்னகத்தழுந்தினனெனத்தச்
சித்திரமுணரின்வியப்புறாயாரேதேவர்மானிடர்முதலோருள். (௨௬)

ஆதிநாயகன்பாற்பத்திரமலர்கொண்டடைபவர்யாருமின்றடைவா
ரோதியமதவேளொருவனேயதனைக்கொண்டிற்றனவாதனையுற்றான்
யேதினியிடத்துக்கதிர்வரக்காணும்விழியெலாம்பெறாவிபடையக்
கோதியல்கூகையிழிகளேகண்டுகுருடடைந்திருளுறல்போலும் (௨௭)

மாரவேளெரிந்துமுடிந்ததுகண்டுவசந்தனோட்டெடுத்தனனஞ்சி
வீரவேளெனுங்கட்படைகளுமோடிவிரும்புபன்மலர்க்கருங்கூந்தல்
சோரவேயிரதிதான்மிசைவிழுந்துதுடிதுடித்துப்புரண்டிடலும்
வாரநீர்விழியினனையளுஞ்சோர்ந்துமயங்கிவீழ்ந்தெழுந்திதுபுகல்வாள். (௨௮)

வேறு.

கண்கவரும்வடிவமைந்தகட்டழகாமாலிகைத்தோட்காளாய்நாளும்
விண்கவரும்வரிசிலைக்கைவித்தகாசம்பரனைவென்றவீரா
மண்கவருந்திருமுகத்தாயகன்மார்பப்பெருந்திறலாய்மருவுந்தோறெ
னெண்கவருங்குறுகையாயெங்குற்றாயெங்குற்றாயெங்குற்றாயே. (௨௯)

வல்லாருங்களபமுலைப்பூமகளுநாமகளும்வானவாழ்க்கை
யல்லாருங்கருங்கூந்தலயிராணிமுதலியசூராரிவைமாரு
மெல்லாருமங்கலம்பூண்டிருக்கநானமங்கலம்பூண்டிருப்பேன்கொல்லோ
வில்லாருங்கரதலத்தென்பிராணநாயகவெங்குமேவினாயே. (௩௰)

ஒருகாலுமெனையகலாயகன்றிடுமோரபராதமுனக்கென்செய்தே
னருகாலும்படையுடனின்னலங்காரவருதலையேயவாவிநின்றேன்
குருகாலுமலர்ப்பொழிலுமெனைப்போலவெழிலிழந்துகுழையுமானி
னிருகாலுமுக்காலுந்தொழுவேனென்னெதிரொருகாலெய்துவாயே. (௩௧)

கேடறியாமுதலொடுநீபொரப்போதற்காறென்றேன்கேட்டாயல்லை
வீடறியாவஞ்சனைசெயரிபிரமாதியர்வார்த்தைவீணேகேட்டு
நாடறியாநினதுதிருவுருவமிழந்தனையந்தோநானென்செய்கேன்
பாடறியாவுளகத்தென்பாகடைகொள்வானொருகாற்படருவாயே. (௫௨)

மட்டுமலர்க்கணையொன்றாற்புவனமுழுவதுமயக்குமாராமாமை
சொட்டுமுகமின்னொருகாற்காண்பேனோபணைத்ததடந்தோள்சேர்வேனோ
கட்டுசடைப்பெருமானாரெதிர்சென்றுசணைதூவிக்கட்டபாயப்
பட்டுமடிந்தனையந்தோவென்செய்கேனென்செய்கேன்பாவியேனே. (௫௩)

வேறு.

என்றுபுலம்புவள்வீழுவளெழுவளணிலமேற்புரள்வள்
கன்றுபிரிதருமாவிற்கலங்குவள்கைத்தலங்கொண்டு
துன்றுமுலைமேற்புடைப்பள்முகத்தறைவயொழிதற்
கொன்றுதுணையில்லாளாயுறத்தளருமவ்வேலை. (௫௪)

இமையாருமிமையாருக்கிறையோனுமறையோனு
மமையாருந்தோட்டிருமாதமர்மார்பப்பெருந்தகையுங்
கமையாருமுனிவரருங்கருடருங்கிம்புருடருமட்
சுமையாருமனந்தனொடுதோலாப்பல்பன்னகரும். (௫௫)

சித்தருமற்றியக்கரும்வித்தியாதரருஞ்சாரணரு
முத்தமநல்வசுக்களும்பல்லுருத்திரருஞ்சூரியரு
மொத்ததிசைபுரப்போருமுரையாதமற்றையரும்
புத்தமுதமொழியிரதிபுலம்புமிடம்புக்கனரால். (௫௬)

எல்லாரும்வரக்கண்டவிரதியெழுந்தவர்முனம்வீழ்ந்
தொல்லாரும்புரிவரியவொருகுய்யமுறப்புரிந்து
கல்லாருந்துதித்திடுமென்கணவனாருயிர்மாய்த்தீர்
பல்லாரும்வாழ்ந்திருப்பீர்பாங்காமோவுமக்கென்று. (௫௭)

கொம்பரிலாக்கொடிபோலக்குழைந்துகுழைந்தறத்துவண்டு
பம்பரமாமுலையிரதிபடும்பாடுதெரிந்தொளிர்பொ
னம்பரமாயவனருகேயடைந்துவிழிநீர்வார
வும்பரவாவருண்முதல்வனுளனீயஞ்சலையென்றான். (௫௮)

பொன்னேயாமெண்ணியதுன்புருடனைக்கொன்றிடுவதற்கோ
வென்னேயாமொன்றெண்ணத்தெய்வமொன்றெண்ணியதெனினுங்
கொன்னேயாம்போகோநின்கொழுநனையெவ்விதத்தானுங்

என்றுநெடுமாலிரங்கியிவ்வாறுசொலிப்பின்னுங்
குன்றாகருங்குழன்மாதேசொற்றபடிகேள்பெருமா
னொன்றுமலரடியுளத்தேயுன்னிநீதவம்புரிதி
நன்றுவரம்பெறவின்னேநாமுமவன்சரணடைவோம். (௩0)

அஞ்சாதேயென்றுரைத்தவரிவார்த்தையுளங்கொண்டு
மஞ்சாருங்குழலிரதிமன்னுதவம்புரிந்திருந்தா
ளெஞ்சாதகவேடியோனினிதமருமாதேவர்
தஞ்சார்புபெறச்சென்றார்சக்கரபாணியன்முதலோர். (௩௧)

அருமறைக்குமெட்டானையன்பிலர்பாலெட்டானைக்
கருமதனைச்சுட்டானைக்கருணைசெயமுட்டானை
யிருவினையுமட்டானையென்னுரையும்பெட்டானை
பொருவிறிசைப்பட்டானைபொற்பதியைநட்டானை. (௩௨)

பன்னுமரிதகிநிழலிற்பச்சிமம்பார்த்துறைவானை
மன்னுமுயிர்க்குயிராகிவயக்கமிகநிறைவானை
முன்னுநிகமாகமங்கண்முழுதுமெடுத்தறைவானை
மின்னுமிருதயங்குளிரவிழிகுளிரக்கண்டார்கள். (௩௩)

பத்திமிகவட்டாங்கபஞ்சாங்கத்தொடுபணிந்தார்
சுத்திமிகக்கடுவோடுதுன்னுபலமுறைசூழ்ந்தார்
முத்திமுயல்பவர்க்களிக்குமூலாதமுழுமுதலை
நித்தியநின்மலப்பொருளைநேர்நின்றுதுதிசெய்வார். (௩௪)

ஆயிரமாமுகநயனமாயிரங்கையாயிரம்வா
யாயிரமங்குழைச்செவியோராயிரந்தாளாயிரங்கொண்
டாயிரமாமறைபரவப்பாலாய்நின்றொளிரு
மாயிரநாமம்புனையுமண்ணாநின்னடிபோற்றி. (௩௫)

ஐயனேநினக்கபயமடியார்செய்பிழைபொறுக்குஞ்
செய்யனேநினக்கபயந்திருமறையொண்முடியமரு
மெய்யனேநினக்கபயம்விச்சுவாதிகமழுக்கொள்
கையனேநினக்கபயங்காபாலிநினக்கபயம். (௩௬)

அண்ணாநின்னடிபோற்றியருந்தவஞ்செயாக்கொடிய
ரெண்ணாநின்னடிபோற்றியேற்றமதனுருக்காய்ந்த
கண்ணாநின்னடிபோற்றிகற்பனைதீர்ந்தவிரந்தி
வண்ணாநின்னடிபோற்றிவள்ளாளின்னடிபோற்றி. (௩௭)

மதிமேவுமுடிதொழுதோம்வயக்குதிருமுகங்தொழுதோக்
துதிமேவுவிழிதொழுதோங்தோளாதபுயங்தொழுதோங்
கொதிமேவும்மழுதொழுதோங்குன்றவார்சிலைதொழுதோங்
கதிமேவுகழறொழுதோங்கமழ்ந்தபோருடொழுதோம். (௪௮)

சித்தமாசறுத்தொளிருஞ்செல்வருளத்தகலாத
சுத்தமாமணிச்சுடரோனாண்டாதசுடாவிளக்கே
பத்தமாதவர்மகிழப்பழவினைகண்முழுதொழிக்கு
முத்தமாவரிதகிவாழ்யோகீசவுனைநினைப்போம். (௪௯)

எச்சநாயகபுவனமெலைவக்குநாயகவனவா
வுச்சநாயகபலருமுவக்குநாயகவிமையப்
பச்சைமாமயிறழுவப்படுபாலகருணை
விச்சைநாயகசரணம்வீரட்டேசுரசரணம். (௫௦)

என்றுதுதிபுரிவாருக்கெம்பிரானருள்சுரந்து
கண்றுமக்குவேண்டுவதென்விளம்புமெனவடிதாழ்ந்தே
யொன்றுமடவாரின்பமுற்றிலேமொல்லாரே
வென்றுகொளமிகுதுன்பமேன்மேலுமடைந்தனமால். (௫௧)

எங்கண்மனக்குறைதீரவிமையமயிறனைப்புணர்ந்து
கங்களிருமூன்றுடையகாளையுதித்திடவருளி
யங்கணருள்சுரந்திடுதியரிதகிமாவனத்திலமர்
திங்கண்முடிக்கணிந்தருளுந்தேவாவென்றிரந்தனரே. (௫௨)

இரந்தவரமுழுதருளியிணையகீர்செய்ததுதி
பரந்தவெமகவெதிர்துதிப்போர்பாதககந்தீர்ந்துயர்வரென
வரந்தனிதந்தயனரிமுன்வானவர்க்குவிடைகொடுத்து
நிரந்தரமுறருள்சுரப்பநின்மலநாயகனமர்ந்தான். (௫௩)

காமதகனப்படலம் முற்றிற்று

ஆ திருவிருத்தம் - ௩௪௧.

---

# திருக்கலியாணப்படலம்.

———:0:———

அரிதகிவனமேவுமண்ணறனருள்வழியே
யரியயன்முதல்யாருமவரவரிடம்புக்கார்
புரிதருசிலநாள்கள்போயினவொருதானே

சுடர்விடுபொஞ்சோதிசுவேச்சையனுதலினாற்
படருலகினர்தவிரப்பார்ப்பதிமணங்குறித்தே
கடலுலகினிதேத்துங்காசிபன்முதலாய
மடனிகுமெழுமுனிவர்வருகெனநினைத்தனனே. (௨)

எழுமுனிவருமுடன்வந்திணையடிமிசைவீழ்ந்து
தொழுதனர்கடுவோடுசூழ்ந்தனரெதிர்நின்று
செழுமறைமுடியமருஞ்சின்மயபரம்பொருளே
பழுதகல்பெருவாழ்வேபணியெவனெனவினவ. (௩)

எவ்வுயிர்களுமின்பமெய்திடுவதுகுறித்து
மைவழிகண்ணுமையைமணஞ்செயவேண்டுவதா
லவ்வியமுதல்யாவுமறுத்துயர்முனிவீர்நீர்
செவ்வியமலையிறைபாற்சென்றுரைத்திவண்வருவீர். (௪)

விரைதருநடமினெனவிடைகொடுத்தருளுதலும்
புரைதபுமவர்தொழுதுபொருக்கெனமகிழ்ந்தெழுந்து
வரையிறையெதிரடையமற்றவனெதிர்வந்து
கரையறுமகிழ்ச்சியொடுகைகுவித்தழைத்தேகி. (௫)

ஆதனத்தினிதேற்றியருக்கியமுதலாய
தீதறுமுபசாரஞ்செய்தனன்கொண்டாடி
மேதகுமுனிவீர்நீர்மேவுதற்கியான்செய்த
மாதவமெவனென்றுவழுத்தினனெதிரிருந்தே. (௬)

கரிசறுநீர்வந்தகாரியமெவனென்ன
வரிதகிவனமேவுமருள்மலியோகீசன்
பரிதருகருணையினாற்பார்ப்பதிமணஞ்செய்வான்
றெரிதரவுமையினெனச்செப்பவந்தோமென்றார். (௭)

என்றலுமலையரசனெழுந்துகைதொழுதாடி
நன்றருள்பெருமானேநயந்திதுகுறித்தனனேன்
மன்றவென்பிறவிதவம்வாசித்தமறையோடு
மொன்றுறவுயர்ந்தனவாலொப்பவரெனக்கென்று. (௮)

உவளகம்புகுந்துவகைமேனைக்குமுறைசெய்து
பவளமெல்லிதழ்ப்புதல்விபார்ப்பதிபாற்சென்று
தவளவொண்பொடிபூசுந்தாபதர்வரவோதி
யிவளவெனுமகிழ்வோடிருடியர்பால்வந்தா (௯)

காசிபனத்திரியொண்கௌதமனொடுவசிட்டன்
கோசிகன்சமதக்கினிகுலவமெய்யுணர்பரத்து
வாசனிவ்வெழுவரையும்வந்தித்துமாமுனிவீர்
நேசமிக்குயாநாளினினினைந்தருளியபடியே. (௧௦)

திருமணமினிதாற்றத்திகழரிதகிவணம்வா
ழொருமுதல்யாவரொடுமுவந்தெழுந்தருள்கவெனப்
பெருமுனிவரர்வாழ்த்திப்போயினர்பெருமான்பாற்
றருமலிமலையரையன்றூனிதுசெய்தனனே. (௧௧)

விச்சுவகன்மனைக்கூய்மணஞ்செயமெய்ம்மறைநூ
லச்சுவனயனுதியமரரோடெழுந்தருள்வா
னச்சுவபன்மணியுநகுமணிமண்டபமுற்
றச்சுவமானமறச்சமைத்திடுகடிதென்றான். (௧௨)

என்றலுமயனுள்ளத்தெண்ணுபுமகிழ்ச்சியொடு
மன்றல்செய்யாயிரக்கான்மண்டபங்கோபுரமே
லொன்றல்செய்மாமதில்களடுக்கியவொளிர்மாடங்
கன்றலிலாதுலகர்கண்கவர்மணவரையே. (௧௩)

தோரணங்கொடியமையத்துன்னியபந்தர்க்கு
நாரணனயன்முதலோர்நயந்துறைதருமிடமும்
பூரணகுடமமையப்பொலிதருவேதிகளுந்
தோரணவீதிகளுஞ்சுடர்விடுமொடரங்கும். (௧௪)

கன்னலுமரம்பைகளுங்கட்டியகாலுடைய
மின்னகுமணிமாடமேற்பொலியரமியமு
மென்னவுமினிதமையாவெழுந்தொருமலையரசன்
பொன்னடிபணிந்துரைப்பப்புந்தியின்மகிழ்பூத்தான். (௧௫)

வேண்டுபகரணமெலாமேதகவினிதீட்டிப்
பூண்டபன்மணிமாலைபுனைபுயம்பூரிப்ப
வாண்டவன்வரவெதிர்பார்த்தணிமலையரசிருந்தான்
காண்டகுதவமுனிவர்கலந்தனர்பெருமான்பால். (௧௬)

வரையிறைசம்மதமுமற்றையர்மனமகிழ்வு
முரைசெயவெம்பெருமான்கேட்டினிதுவந்தருளி
விரைகெழுமலராளிவிண்டுவைமுதலாய
கரையிலர்வருகவெனக்கருதினன்வந்தனரே. (௧௭)

மருத்துவர்கணமொருபால்வசுக்கடங்கணமொருபா
லுருத்திரகணமொருபாலும்பர்தங்கணமொருபா
லிருத்தியகந்தருவர்சித்தர்தங்கணமொருபா
லருத்திசெய்திடுமியக்கராதியர்கணமொருபால். (௧௮)

வாசவன்முதலாயவெண்டிசைமன்னவருங்
கேசவன்கோகனதக்கிழவனுமாதவத்துப்
பேசுபன்முனிவரும்பிறங்குதன்பன்னியரோ
டாசறமகிழ்ச்சிமிகவரிதகிவனம்புகுந்தார். (௧௯)

வனமலிதரப்புகுந்தார்மாதவரெழுவர்களாற்
கனநிகர்களப்பெருமான்கடிமணங்கேட்டருளி
யனநடைமனைவியரோடன்புமிக்குறமகிழ்ந்து
தினகரவொளிப்பரனைச்சென்றுசென்றடிதொழுதார். (௨0)

புண்ணியமுழுமுதலேபூரணவான்பரமே
கண்ணியமெய்யடியார்கைப்படுமாமணியே
யண்ணியயாங்களெலாமளப்பருமின்படைவா
னெண்ணியதிருமன்றற்கெழுந்தருளுகவென்றார். (௨௧)

மருவரிதகுமூலம்வயங்குறவொருதானே
யொருவருமாவிலிங்கவுருக்கொடுபொலிந்தான்பின்
னிருவருமுணரொண்ணாவெம்பெருமானருளாற்
பொருவருமணக்கோலம்பூண்டனன்வெளிவந்தான். (௨௨)

இளங்கதிர்பலகோடியெழுந்தனவுருக்கொண்டு
வளங்கெழுமணிமகுடமணிக்குழைகேயூர
முளங்கவர்முத்தாரமொளிசெய்மதாணிமுதல்
விளங்குபொற்பணிபலவுமிளிர்தரும்படிநின்றான். (௨௩)

அயனரிமுதலானோரரகரவென்று
பயனமர்கைகூப்பிப்பணிவிடைதலைக்கொள்ள
நயமிகுகணநாதர்நந்திமுன்னோர்சூழ
வியன்மிகுவெள்விடைமேலிவர்ந்தனனுலகுய்ய. (௨௪)

பல்லியமுழக்கமெழப்பண்ணவர்புகழ்ந்தேத்த
வல்லியங்குழன்மடவாரளவிலர்கவரிகொளச்
சொல்லியமணிமுத்தச்சுடர்க்குடைநிழல்செய்ய
நல்லியவெம்பெருமானடத்தினன்வெள்விடையே. (௨௫)

வானவர்கணத்தொடெம்மான்வருவதையுணர்ந்தே
யூனமில்மலையரையனுபாயனமதுவருக்க
மானவையுடனெதிர்கொண்டடிமிசைப்பணிந்தெழுந்து
கோனகர்களிசிறப்பக்கொடுபுகுந்தனன்மகிழ்ந்தே. (௨௬)

இகன்மிகுவெள்விடைநின்றிழிந்தொருமாதேவ
னகன்மிகுமாயனயனந்தணர்கைகொடுப்பத்
தகன்மிகுபாதுகைமேற்றாமரைப்பதம்வைத்துப்
புகன்மிகுமணவளாயிற்போயினிதிருந்தனனே. (௨௭)

மாயவன்முதலாயவானவர்மாமுனிவர்
தூயநன்மலரிட்டுதொழுதனர்சூழ்ந்திருந்தா
ராயவப்பொழுதுமகிழ்ந்தமரர்தங்குரவனடைந்
தேயமண்டலங்குண்டம்வேதியங்கினிதாற்ற. (௨௮)

திருமனுவெடுத்தோதிச்சிருக்குறநெய்பொழிய
வுருகெழுசெந்தீயோன்வலஞ்சுழித்தோங்கியெழ
மருமலர்குழன்மாதைமலிவிரைதுவரப்பிப்
பொருவருபுண்ணியநீர்பொற்பமஞ்சனஞ்செய்தார். (௨௯)

பொன்னொடுமணிபலவும்பூண்டொளிர்பட்டொன்று
தன்னொடுநிகரில்லாத்தாயனைக்கொளப்புனைந்து
மின்னொடுமாறுகொளாவில்லிடுபன்மணிப்பூண்
முன்னொடுபின்னருமம்முதல்விமெய்கொளத்தரித்து. (௩௦)

பாலிகைமுளைவயக்கிப்பைம்பொற்கங்கணந்தரித்து
வாலியகோதானமங்களநனிசெய்து
நூலியலிடபமதிநோற்றசுக்கிலபக்கத்
தாலியபஞ்சமிசேர்ந்தாயவுரோகணிநாள். (௩௧)

உலகொருங்கீன்றாளையோங்குபல்லியமுழங்க
மலர்முகவநிந்திதைமுற்றோழியர்வளைந்துவர
வலமரிருமாதரருகுகைகொடுத்துவர
நலர்தொழக்கொடுவந்துநாயகன்பால்வைத்தார். (௩௨)

மலையிறைமேனையொடுவெள்ளநனெதிர்வந்து
கலைபுகழிறைவிதனைக்கண்ணுதற்பெருமானே
நிலைமையிற்கொள்கவெனநீரொழுக்கினன்றொழுதா
னலைகடன்முழக்கமெனவார்த்தனபல்லியமும். (௩௩)

விதிவழிபுரிகுண்டச்செந்தழல்வீங்கியெழ
வதிசுவைதருபாணூறுயிரங்கோதான
நிதிகலைமுதற்றானநிகரிலையெனப்பொழிந்தான்
மதிமலியாவர்களுமலர்மழைபெய்துவந்தார். (கூச)

நிறைபலவுயிரீன்றநின்மலைதிருக்களத்து
மறைபுகழ்மாதேவன்மங்கலநாண்பூட்டி
கறையறவறம்வளர்க்குங்கையொருகைபற்றி
யுறையழல்வலஞ்சூழ்ந்தாங்கொண்பொரியுறவட்டி. (கூரு)

மங்கலமனையாட்டிமலரடிகரம்பற்றிப்
பங்கமின்மணவம்மிபதிதரமேலேற்றி
யெங்கள்பிரான்வடமீன்காட்டினனினிதிருந்தான்
துங்கவக்கரைதூர்வைதூர்த்திறைஞ்சினர்பலரும். (கூசு)

குலமறைவிதிப்படியேகுறையறச்சடங்கனைத்து
நலமுறச்செய்ததற்பினகுபுகழ்மலையரையன்
வலமணிமகுடாதிமாலயன்முதலோர்க்கு
நிலவுறப்பலகொடுத்தானிரம்புவகையிற்படிய. (கூஎ)

தவமுனிவரர்வானோராதியர்தாமெல்லா
மவரவரிடம்புகுவானங்கணன்விடைகொடுத்தே
யுவமையின்மலையரையற்கருள்புரிந்துமையோடுஞ்
சிவமலிகைலாயஞ்சென்றனன்விடையேறி. (கூஅ)

மாயவனகலாணுய்வள்ளலைத்தொடர்ந்தேகத்
தூயவனதுகண்டுசுந்தரநெடுமாலே
மேயதென்னுடனென்னவீழ்ந்தடிபணிந்தெழுந்து
பாயவென்றுயரகலப்பண்ணுதியெனவேண்டும். (கூகூ)

புண்ணியமறைமுதலேபுத்திரசோபத்தா
னண்ணியவொருநாயேன்மெலிவதுநன்றாமோ
கண்ணியவதுதீரக்கடைக்கணித்தருளென்னத்
தண்ணியமதிமோலிச்சங்கரனிதுகூறும். (சய)

வேறு

பொறியமர்மருமமாலேபுத்திரசோகநீங்கக்
குறியமர்கவனத்தைக்கூடியங்கெமைக்குறித்து
நெறிவளர்விரதநோற்பாளவளொடுகெடுவிற்காமன்
செறிவளர்சாம்பர்மேட்டைச்சேருதிகமையுட்கொண்டு. (சக)

பொடிபடுசாம்பரெல்லாம்பொலியவோருருவாச்செய்து
கடிபடுகுலவாவிக்கமழ்புனல்மேற்றெளித்தி
குடிபடுமிடையாண்மட்டுங்காணமுன்னுருவாத்தோன்று
மொடிபடுமற்றையோருக்கனங்கனுயுறைவனுளும். (௪௨)

அண்ணியநெடியமாலேயநங்கனுகியநின்சேயை
யெண்ணியபலருங்காமமெய்துவரினியநீழல்
பண்ணியகடுழலத்திற்பச்சிமமுகமாய்நாமே
புண்ணியவிலிங்கமாகிப்பொலிவம்யோகீசனென்ன. (௪௩)

பிறங்குமிம்மடந்தைசஞானம்பிகையெனப்பொலிவாளொரு
மறங்குலவொருநமக்குநிருதிதிக்கடுத்தவாவி
பிறங்குமெல்லைக்குநாப்பணிருந்துநீவாசஞ்செய்தி
நிறங்கொளுன்பெயராற்றீர்த்தநிகழவொன்றமையச்செய்தி (௪௪)

பதிர்களுக்குவப்பச்செய்யப்பாற்கரக்ஷேத்திரப்பே
ருதிர்தராவண்ணநாட்டியொருகடுழலத்தெம்மை
யதிர்வரப்பூசையாற்றியெண்ணியாரடைபோவென்றான்
கதிர்படுநேமிப்புத்தேள்கைதொழுதிருக்கைபுக்கான். (௪௫)

திருக்கலியாணப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩௮௪.

—:O:—

## காமனுயிர்பெறுபடலம்.



வள்ளலருள்மொழிப்படியேமாயவன்வைகுந்தமொரீஇக்
கள்ளலருமலர்துவன்றுகடுநெடுமாவனம்புகுந்து
புள்ளலருமலர்க்குலப்பொய்கைநறும்புனலாடி
யுள்ளலருமன்பினொடுமொளிதிகழ்வெண்ணீறணிந்து. (௧)

கண்மணிமாலிகைபூண்டுகருத்துறவஞ்செழுத்தெண்ணி
விண்மணிபோற்கடுவெடிவாழ்வித்தகனைமெய்ஞ்ஞானப்
பெண்மணிசேர்பெருமானைப்பிறங்குமதனுடல்பொடித்த
வொண்மணியைக்கண்மணியோடுளங்குளிரப்போய்க்கண்டான். (௨)

கண்டுபணிந்தெழுந்தடிகேள்கைலாயத்துரைத்தபடி
வண்டுபடுமலர்வாளிமாரனுயிர்பெறவேண்டுந்
தொண்டுபடுமெழில்ரதிதுயரமொழிதரவேண்டுந்
தண்டுதலில்புத்திரசோகமுமெனக்குத்தபவேண்டும். (௩)

என்றாகுறையெடுத்தியம்பியினிய திருவருள்பெற்றுக்
கன்றுமனத்தொடுமிரதிதவஞ்செய்யுங்கடையடைந்து
மன்றணைடநவில்பெருமான்வரங்கொடுத்தபடிகூறி
யொன்றும்வெருவலையென்றொருநிருதித்திசைபுகுந்தான். (௪)

அம்புவிழுமெல்லைநிவைமைதரவோர்தடந்தொட்டு
நம்புபுனற்கங்கைமுதனதிகளையாவாகித்து
வெம்புவினைப்பகுதியறமேவியவப்புனன்முழுகிப்
பம்புபலர்கொளவிட்டான்பாற்கரசேத்திரப்பெயரே. (௫)

பதிரொலாமணமகிழ்ப்பெருந்தீர்த்தமிதுசமைத்தே
யதிர்வுறவேள்வெந்தகளத்தணியிரதியோடடைந்தாங்
குதிர்தருசாம்பரைத்திரட்டிபோருருவமுறச்செய்தே
கதிர்படுநேமிப்பெருமான்கையேந்திக்கொடுவந்து. (௬)

மண்முழுதும்புகழ்சூலவாவியகன்கரைவைத்து
விண்முழுதும்புகழ்பெருமான்மென்மலர்த்தாளுளத்துன்னி
யெண்முழுதுங்கவரெழுத்தைந்தெண்ணினனப்புனறெளித்தான்
கண்முழுதுங்கவர்வனப்பிற்காமனுயிர்பெற்றெழுந்தான். (௭)

கண்டாளங்கிரதியுமெண்கட்டழகாவெனத்தழுவிக்
கொண்டாணெட்டுயிர்ப்பெறிந்தாள்கொண்டதுயரத்தனையும்
விண்டாண்மிக்குவப்புற்றாள்மேன்மேலுங்களிநறவ
முண்டாளென்றிடத்தழைத்தாளுடம்பெல்லாம்பூரித்தாள். (௮)

அடலையுருவமுங்காணனணிமைந்தனுயிர்த்தெழுந்த
விடலையுருவமுங்காணன்விரைத்துழாய்முடிமாயோன்
றொடலையமர்குறுங்கொடிக்கையிரதிதுயரறக்கண்டான்
படலைநறுங்கடுக்கைமுடிப்பரனருளையேவியந்தான். (௯)

சாம்பலுருவுடைமைந்தனெழுந்ததுதன்னுளத்துணர்ந்து
தேம்பலொடுசாம்பலிடைச்சிந்தைமயங்கிப்புரண்டோ
னாம்பலநாளித்தலத்தினண்ணுவமேனண்ணரிதோ
வாம்பல்கமழ்வாய்ப்பிருந்தையணியுருவமெனக்கவன்றான். (௧௦)

மைந்தனேத்துதலையான்வாய்மொழியாற்கேட்டுணர்ந்து
பைந்துழாய்மாலைமுடிப்பண்ணவனென்றுரைசெய்வா
னிந்தனுணீயடைந்ததெய்த்தனையேயினியேனு
மந்தநாயகனடிசார்ந்தருள்வழியேநில்லென்றான். (௧௧)

மாரவேளிரதிபொருவெண்சூலப்புனலாடி
யாரமைகளூலத்தவதரித்ததனிமுதலை
யோரவேவுள்ளொளியாயோங்கியெழுமுள்ளொளியைச்
சாரவேயடைந்துருகித்தண்டப்போற்பணிந்தெழுந்தான். (கஉ)

மனையாட்டியேண்டுவெனமகிழ்ந்துகொடுத்திடப்பெருமான்
றனையாட்டிவில்வமுதற்றண்மலர்களபலசூட்டி
வினையாட்டியடியார்க்குவீடுதவும்பெருமானைப்
புனையாட்டிபாகனைமெய்ப்பூசைசிறப்பப்புரிந்து. (கங)

பொல்லாநான்செய்தபிழைபொறுத்தருளும்பெருமானே
கல்லாநானேறினதுகட்டழலுக்கெதிராவேன்
வல்லாநானின்னடிமைமாறுதவன்பருளி
யெல்லாவெம்பவத்துயருமொழித்தருள்வாயெனத்துதித்து. (கச)

மறைபுகன்றாளும்பிகைபொன்மலரடியும்பூசித்துக்
கறையிலருள்பெற்றிருக்கைகாதலியோடிற்றமர்ந்தான்
குறையின்மனோபவன்பணிந்துகொண்டல்போனிறத்தவனும்
பிறைமுடியோனருளியவவ்விடத்தமர்ந்தான்பெரிதுவந்தே. (கரு)

தாவாதகவேலத்தம்பிரான்றனையடைந்தார்
மூவாதபெருங்கருணைமுகந்துகொளாநனிசிறந்து
கோவாதமுத்தமெனக்குலமறைகள்கொண்டாடு
மோவாதஞானமயிலோடுமேவுறைவனால். (கசா)

இன்றுமெழின்மன்மதனையெரித்தவிழாநடத்திடுவர்
தன்றனையிலத்தலத்தேசுற்றிருந்துதவஞ்செய்து
வென்றுமிளிர்மறையோருக்கமுதருத்தின்மிக்கபலன்
சென்றெருராத்திரிவசித்தாற்செங்கைநெல்லியாங்கதியே. (கஎ)

அறிவறியாமையிற்புரிந்தவெப்பாவமனைத்தும்போ
மறிதிரையநெடுஞ்சூலவாவிநீர்புரோக்கணத்தாற்
குறிகெழுஞானம்பிகையோகீசர்முனைக்கொடுஞ்சூலஞ்
செறிபுனல்சாலத்தலமேயெத்தலத்துஞ்சிறந்ததால். (கஅ)

அனையதலத்திருப்பவர்க்குநரகில்லையத்தலத்தே
வனைதிரணபுண்ணியமுமாமேருவெனப்பெருகும்
புனைதருபங்குனிமதியிற்பூருவபக்கத்தடுவிற்
சினைமதவேளுதித்/திதிதெரிந்துமூழ்கிடுவார்க்கு. (ககூ

பரிமேதமாயிரஞ்ராசசூயப்பலனும்
விரிவாசவுண்டாகுமேலுமைறதசவதத்திதியிற்
பரிவாய்விட்டுணுதீர்த்தம்பச்சறுகோணாந்துதலை
யிரியாமலமைமத்துவிதியியன்மனுக்கூறுபுமுழுகில். (௨0)

பற்பலபோகமுமெய்தும்பழையபவப்பாவமும்போம்
வறடுறுமிச்சன்மபாதகமும்போமரணமும்போ
மற்புதவத்தடங்கரையிலமர்ந்துவிதிப்படிவபனம்
பொற்புறவேசெய்துகொண்டுபுண்ணியவங்கீர்மூழ்கி. (௨௧)

தென்புலத்தார்மனமகிழத்திசழ்சருபிண்டங்கொடுத்தா
லன்புமிகக்கயைமேவியாற்றுசிரார்த்தப்பலனும்
வன்புதவிர்தருப்பணஞ்செய்திடிற்பிதிரர்மிகமகிழ்வ
ரென்புகல்வேனெதிறந்துமிதுசெய்யவேண்டுமெவண். (௨௨)

தங்கைசிரார்த்தம்புரியிற்றசக்கோடியதுசெய்பலன்
முந்தூதனுமதியமாவாசியையின்முகுர்த்தங்களுக்கு
நந்துநிவேதனம்பண்ணிநகுநபூயகொடுபோற்றிற்
சந்ததிகுலைவுக்குந்தமடைந்திருதசறப்பாதே. (௨௩)

கும்பமதிப்பூரணையிறகொடுஞ்சிலைக்காமனைப்பெறமா
னைப்பனைப்பூசித்துவந்தானத்தினைநல்லானைந்து
வம்பவிழுமமுதைந்துவண்புனலைகொண்டாட்டியுண்ணிப்
பய்புதிருப்பணிசெய்வார்படருவர்சாயுச்சியமே. (௨௪)

பங்குனியுற்சவநடத்திற்பலனைநாஞ்சொல்லப்போமோ
மங்குதலிலத்தலத்துவசிப்பவரேபிறப்பொழிவார்
கொங்குமலர்க்கணைக்காமன்குலவுகதைபடிப்போரு
மங்குநனிகேட்போருமடைவர்கதிசத்தியமே. (௨௫)

இக்காதைசொல்லுநருக்கியலுபகாரம்புரிந்து
மிக்கார்வத்தொடுபோற்றும்விருப்பினனப்பரசிவனே
திக்காலுமிக்கதையைத்தினகரோதயம்படிப்போ
னெக்காலும்யாகபலனெய்துவன்மாதவத்தோரே. (௨௬)

காமனுயிர்பெறுபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪௧௨.

——:0:——

பாவியிரணியன்மார்பம்பிளந்துநெய்த்தோரத்தனையும்பருகிமீட்டு
மேவிவன்பையாதியெலாமுண்டுவெந்தானடங்காதவெறியேகொண்டு
தாவியமரரைச்சாடத்தலைப்பட்டானுலகுநிலைதளர்ந்துசோர்ந்த
தாவியனையவள்கண்டாள்கம்பமுற்றோர்வரைக்குகைபுக்கடங்கினளே. (௯)

பொறிகுகைபுக்கடங்குதலுமமரெலாங்கயிலாயம்பொருக்கென்றோடி
யறியமுறையிடுதலுமாதேவன்வயிரவற்றோற்றியனுப்பவன்றோ
னெறிதிகிரிப்படைமாலேசமனமாகெனக்கேளாவெனக்குநீயே
நெறிசொலவந்தனைநினக்குமதிககாணுணர்வாளாநீபோவென்றான் (௰)

தாவாதவெறியினன்சொற்கேட்டவயிரவப்பெருமான்சரபமாகி
யோவாதவலிக்கருடனாகமெடுத்தேகுதல்போலுறுகோபத்தான்
மூவாதநகத்தினாடங்கலைக்கோத்தெடுத்துமேன்முடுகியென்றும்
பூவாதவெறியொழியநாலுயோசனைபோய்க்கீழ்போகட்டானே. (௧௧)

போகடலுந்தலையுடைந்துநிலையுடைந்துமலையுடைந்தாற்போன்றுமாழ்கி
மாகடனேரிரணியனைத்தோர்க்குடித்தவெறிமுழுதுமாய்ந்துபோக
வாகடவுடனையச்சேதாவமதித்தேனெனநடுங்கியச்சம்பூண்டு
நீகடவுளெனத்திரநேர்நின்றுதொழுதுதுதிசெய்யுமாலே. (௧௨)

மிருகருணைக்கடலேசிந்தனைக்கடங்காவைபவமேவேதவைப்பே
நகுமளவிலாதகுணநீதமேயுரைக்கடங்காநலமேகோடிப்
புகுசருவகாரணமேபுகல்பரமகல்யாணபுனிதவாழ்வே
யுருதவினித்தியசரபரூபமேயெனத்துதிக்கவுவந்தானையன். (௧௩)

இன்றுமுதன்மாயவசத்துவச்செயற்கைநினக்குரியதிரியாவண்ண
நன்றுபுலிபுரத்தியெனநவின்றனனீங்கினனெவருநலமேயுற்றா
ரன்றுதனதிருக்கையரியடையவிடுவச்சேனனடியிற்றாழ்ந்து
கன்றுதிருமகளுனதுவெறிகண்டுகுகையொளித்தாள்கரியோயென்றான். (௧௪)

அன்னபொழுதலர்மகளையருகழைத்துச்சிறிதுசினந்தகலமேவு
மின்னனையாயருவருப்பென்மேலடைந்துவெறுத்தனைகைவிட்டும்போனு
யென்னவருவருப்புறினுங்கொண்டானைக்கைவிடுவாரெங்குமில்லை
நன்னயமிலுனைச்சேரேனிப்பாவந்தீரளவுநங்காயென்றான். (௧௫)

அச்சமிகவறியாதுசெய்தபிழைபொறுத்திடுதியண்ணலென்று
கச்சமகல்பெருங்கம்பமுடையாளாய்ப்பணிந்தெழலுங்கரியோனோக்கி
யுச்சமிகுசிவபூசைசெய்தனையேலிப்பாவமொழிந்துபோம்பின்
பொச்சமறவடையென்றானென்றலுமற்றவற்றொழுதுபுறத்துற்றாளே. (௧௬)

உற்றதிருமகள்கம்பமொழிக்குமிடப்பூசித்தற்குரித்தென்றெண்ணிப்
பொற்றநெடும்புடவியெலாமுழன்றுமொழிந்திலண்மிகவும்புழுக்கம்பூண்டே
யற்றமினங்சடுவனத்தையடைந்தாளப்பொழுதேதீர்த்தன்றுதொட்டுக்
குற்றமிலாக்கம்பாகரமாயதச்சிவனமெய்க்குணமிக்கோரே. (௪௭)

முன்னமரிதகிவனம்பின்யோகீசபுரம்வணங்கண்முற்றமேய
பன்னவருமெய்ஞ்ஞானம்பிகைபுரமொண்புனல்வாவிப்பதுமந்தோறு
மன்னமமர்தருகாமதகனபுரங்காமறுயிரடைந்தமூதூர்
யன்னவொவாவிர்கம்பகரபுரமெனவிப்பெயர்பலவும்வயங்குமாலோ. (௪௮)

கம்பகரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௩௦.

——:0:——

# இலக்குமிபூசைப்படலம்.



கள்ளலரோதி
யெள்ளருமாக்க
முள்ளமர்கப்பம்
விள்ளமகிழ்ந்தாள். (௧)

வரமிகுகம்ப
கரபுரமென்றோர்
திரமுறுநாமம்
பரவமொழிந்தாள். (௨)

இத்தலமேன்மை
யெத்தலமெய்துஞ்
சுத்தமதாய
வுத்தமமென்று. (௩)

மேவியகூல
வாவிபடிந்து
காவியங்கண்ணி
யாவிகுளிர்ந்தாள். (௪)

கடுவெடிமேய
வடுவில்பிரானை
விடுதலிலன்பு
கொடுபணிந்தேத்தி. (௫)

தகைதருஞானம்
பிகையிருதாளும்
பகையறப்போற்றி
நகையினெழுந்து. (௬)

ஒளிசெய்பிராற்கு
வளியுறுதிக்கி
லளிசெயிலிங்கந்
தெளிவினிறுத்தி. (௭)

தன்பெயராலோர்
மென்புனல்வாவி
யின்புறயாரு
மன்பினுண்டாக்கி. (௮)

கங்கைமுனூய
மங்களதீர்த்தம்
பொங்கியதன்கண்
டங்கவமைத்து. (௯)

புனிதமதாகி
யினிதமரன்ன
பணிபடுதீர்த்த
முனிவறவாடி. (௧௦)

### வேறு.

அன்னபுனலெடுத்தாட்டியங்கமர்தன்பெயரிலிங்கந்
தன்னையினிதருச்சித்துத்தாழ்ந்துபணிந்தேத்தியபின்
மின்னைநிகர்நுண்ணிடையாண்மேவியபச்சிமமுகமா
யுன்னியகடுமூலத்தொளிர்பெருமான்முன்புகுந்து. (௧௧)

ஒருகுரோசத்தளவினுத்தரதிக்கிடையோடும்
பெருகுமாபுண்ணியமெய்ஞ்ஞானதிப்பெரும்புனலு
மருகுகூலத்தடமென்றுரைக்கியயோசப்புனலுந்
திருகுநீர்மருத்சமருந்திசையொருதன்றடப்புனலும். (௧௨)

தன்னுடைநாயகனிருதித்திசையமைத்ததடப்புனலும்
பொன்னுடையப்பொலிதிகழைப்பூண்முலைமாமுகங்காட்டி
மன்னுடையாநலங்கயிலம்மைவயினேயேனைதமுகந்
தென்னுடையவிளங்கிரானைந்துசெழுவிரைச்சாந்தம். ௧௩

இனியபான்முதற்பலவுமெடுத்தெடுத்தன்புறவாட்டிக்
கனியவாமொழிமடந்தைசருநெய்தல்புன்னையும்
பனியவாந்துரோணமகிழ்வைக்துழாய்நறவொலவ
னனியவாம்வில்வமுதலுறுபுபறப்பலருட்டி. (௧௪)

திருவைமதுங்கழியமுதுகுசிற்றுணவின்பல்வகையு
மருவுவிருப்பொடுமூட்டிவயங்குதீபமுங்காட்டி
பொருவுதவிர்கருப்பூரப்புண்ணியதீபமுங்காட்டித்
திருவுபசாரம்பிறவுஞ்செய்யாமலினிதாற்றி. (௧௫)

சாந்தகுணவிமலானஞ்சங்கரகங்காதரசா
மாந்தகயோகிசபவவரிப்பிரியவிசுவபர
நீந்தரியபவநாசநித்தியநிட்களபுவன
வேந்தபசுபதிநிமலவீரட்டேசுரசரணம். (௧௬)

கூவியினிதடியர்பணிகொண்டருளுமெய்பெரும
தேவியோர்பாலுடையதிவ்வியமங்களசுகுண
காவிநிகர்களசகளகருதருநிட்களபுனித
மேவியருள்பெருங்கருணைவீரட்டேசுரசரணம். (௧௭)

கடுவடியின்முளைதெழுந்தகரும்பேநின்னடிபோற்றி
கொடுவரிவென்றுடுத்தகுணக்குன்றேநின்னடிபோற்றி
வடுவரியமனம்பதியுமணியேநின்னடிபோற்றி
நெடுமறைகளளப்பரியநிதியேநின்னடிபோற்றி. (௧௮)

# திருக்குறுக்கைப் புராணம்.

## குமாரபூசைப்படலம்.

———:o:———

மயிலைநேர் சாயலாளை யாமணஞ் செய்துகொண்டுக்
கயிலைமால் வரையைச் சார்ந்த கண்ணுதற் பரமயோகி
வெயிலையே யீசயோனி விண்ணவர் கருவப்புகச் செய்வான்
குயிலைநேர் மொழியாளோடு கூடியாட் டயர்ந்தானன்றே. க

ஆயிரவருட மிவ்வா றளவளா யாடுங்காலை
மாயிருவிசும்பு வெளவுவன் றொழிற்றகுவர்க் கஞ்சி
மீயிருஞ்சுரர்களெல்லாம் வெள்ளியங் கிரியைச் சார்ந்து
பாயிரமறையுந் தேறாப் பண்ணவ வபயமென்றார். உ

தேவர்தமபயங் கேட்டுத் திருப்பெருங் கருணைசெய்து
மூவருமறிய வொண்ணா முதல்வனா கந்தை நீங்கி
யேவரவெளியே வந்து தமிளிர்சத்தி திருமுகத்தோ
டாவருந் திருமுகங்க ளாறடைந் தங்கயர்ந்து. ங

அறுநுதல் விழியினின்று மறுபொறி சிதறவந்த
மறுவருபொறி மேலோங்க வானவரச்சந் தீர்ப்பான்
சிறுபொறியாகச் செய்து தேயுவை வளியைக்கூவி
யுறுபொறி யிவற்றைக் கைக்கொண் டேய்த்திடுங் கங்கையென்று. ச

ஆற்றலுநல்கக் கொண்டா ரன்னவர் மாறித்தாங்கி
யூறறமார் கங்கையாற்றின் விடுதலு மதுவுமஞ்சிப்
போற்றுறுஞ் சரவணத்திற் புகவிடுத்ததுபுக் காங்குத்
தோற்றமோர்ந் தமரர்யாருஞ் சூழ்ந்துகாத் திருந்தாரன்றே. ரு

இளங்கதிராறோர் காலத் தெறிசுடன் முளைத்தாலென்ன
வளங்கெழு குழவியாறு வயங்குமப் பொய்கைதோன்ற
வுளங்குளிர்ந் தமரர்யாரு மொருங்கறு மீனைக்கூவி
விளங்குபால் கொடுக்கவேவி வீறுற வளர்த்தாரன்றே. சா

மழமகவுதையங் காண்பான் மால்விடை யுமையோடேறிக்
குழமதி முடித்தபெம்மான் குறுகினனங் கப்போதே
யழகியவுமையாள் செஞ்சே யாறையுமணைத்துக் கங்கை
தொழவருமா றீராறு விருந்தவா துலங்கவிட்டு. எ

திருவடியிரண்டுமேனி திகழுமொன்றாகச்செய்து
மருவருமார்பிற்சேர்த்து மாமுலையூட்டவுண்டு
பொருவருவனப்புவாய்ந்து பொலிந்தது குழவிதேவி
யொருவருமாசைகொண்டேயுற்றனள்பரமன்பாங்கர்.

மால்விடையுகைத்துவெள்ளிமால்வரையடைந்தானையன்
பால்வருபிறைபோல்மைந்தன்வளர்ந்துபல்விளையாட்டாற்ற
மேல்வருமமரர்சேனைவேந்துநீயாகவென்று
சால்புடைப்பட்டங்கட்டிச்சங்கரன்பாதந்தாழ்ந்து. (௯)

ஐயவெவ்வசுரர்தீமையறுத்தருள்செய்தியென்னச்
செய்யதன்மகவைக்கூவித்திகழ்தரவணைத்துமோந்து
கையமர்நெல்லிமாறுங்கடுவெனத்தமைப்பூசித்து
வெய்யவல்லசுரர்ச்சாடிவிண்புரந்திடுகவென்று. (௧௦)

சத்திபொன்றங்கைநல்கித்தவாப்பெரும்படையுங்கூட்டி
முத்தியெண்ணினர்க்குநல்குமுழுமுதல்விடையுநல்கப்
பத்தியிற்பணிந்துதந்தைபங்கயப்பாதம்போற்றி
சித்திபெற்றெழுந்தானெங்கள்சிந்தைவீற்றிருக்குஞ்செவ்வேள். (௧௧)

வானவர்கணமும்பூதகணங்களுந்தொடரவந்து
கானகமெனைகருமேலாமரிதகிக்காட்டையுற்று
ஞானநல்யாற்றுமூழ்கிநகுதிரிசூலசங்கை
யானவண்புனலுந்தோய்ந்தானரிதகிமூலமுற்றான். (௧௨)

பிறங்குயோகீசர்ஞானாம்பிகையிருவரையுங்கண்டு
நிறங்கிளர்புவியிற்றோயவொருரேலெனப்பணிந்தெழுந்து
மறங்கிளரவுணர்ச்சாடிவாகைகொள்வரங்கொள்வான்மிக்
கறங்கிளர்பூசையாற்றியன்பினோற்றுதித்துவேண்ட. (௧௩)

சடுவடிமுளைத்தயோகிகாதலற்கருள்சுரந்து
விடுசுடர்ச்சூலமொன்றுமேவுறகொடுத்துவானை
யடுதிறற்றருவராவியழித்தடைவாகையென்று
தொடுகழற்குமரன்றன்னைத்தூயயோகீசனேவ. (௧௪)

விடைகொடுதொழுதுபோந்துவிண்ணவர்தமக்குநாளு
மடையலராயதாரகாசுரனுதிவெய்யோர்
படையொடுமடியமாய்த்துப்பண்ணவர்சிறையைமீட்டு
நடைகெழுமயின்மேலேறிநலங்கொடன்னிருக்கையுற்றான். (௧௫)

வெள்ளியங்கிரியின்மேயவித்தகனேவப்போந்தே
யள்ளிலைவடிவேலைம்பியாற்றினன்பூசையென்று
மொள்ளியவறிவினார்க்கீடொருகடுவனத்தின்மேன்மை
வள்ளியயாரேசொல்லவல்லவர்மதிக்குங்காலே. (௧௬)

குமாரபூசைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪௭௧.

——:0:——

# இராமலிங்கப்படலம்.



தொற்றமேவியகோசலைநாட்டிறு
னற்றமேயுமயோத்திபுரப்பவன்
கற்றயாருங்கரையுந்தசரதற்
குற்றமைந்தனுவக்குமிராமனே. (௧)

தாதைசொற்கொடுதம்பியும்பேரெழிற்
சீதையும்பின்றொடர்தரச்சென்றனன்
பேதையாளர்விருப்புவனம்புகுந்
தோதைமாதவரோடுறைந்தானரோ. (௨)

அன்னகாலையிலப்பனிறந்தன
னென்னவந்துபரதனியம்பினன்
சொன்னபோதுதுணுக்கமுற்றேங்கியே
யின்னன்மேவியிரங்கியழுதனன். (௩)

ஐயனேயெனுமாண்டகையேயெனு
மெய்யனேயெனும்வித்தகனேயெனுஞ்
செய்யகோலுடைச்சேவகனேயெனும்
வெய்யனேனைக்கைவிட்டனையேயெனும். (௪)

எந்தநாளுனைக்காண்பணியானெனும்
வெந்ததோவுன்விறற்றடந்தோளெனுஞ்
சந்தமார்பிலெனைத்தழுவிக்கொளா
வந்தவன்மையடைந்ததெங்கேயெனும். (௫)

சோரும்வீழ்ந்துதுடிக்கும்விழிகணீர்
வாருமாறவருந்துமனத்துயர்
தீருமாறுசிறிதுமிலையெனும்
பாரும்விண்ணும்பரவுமிராமனே. (௬)

இருந்திவ்வாறுமெலியவிராமனைத்
திருந்துமாதவர்யாவருந்தேற்றினா
பொருந்துமாறுபுகன்றுதெளிந்தபி
னருந்துநீர்க்கடனன்புறவாற்றினான். (௭)

அன்னநீர்க்கடனாலுவப்பெய்திலான்
மன்னர்மன்னனைவழிதிருந்தானெந்த
முன்னமோர்ந்துமுனிவிலிராகவ
னென்னசெய்துமிசற்கெனவேங்கியே. (௮)

துங்கமேன்மைச்சுநீக்கனையாதவன்
பங்கமோவுபொற்பாதப்பணிந்தெழா
வங்கணாதவென்னைப்பன்மகிழ்ச்சியி
றங்கநீர்க்கடனாற்றச்சமைந்தனன். (௯)

சிறந்தமாதலஞ்செப்புவையேலவ
ணறந்தவாதடைந்தாற்றுமருளெல்லா
மறந்தமாதவனுள்ளத்துணர்ந்தனன்
மறந்தவாச்சிலைமைந்தனுக்கோதுவான். (௧௦)

வேறு.

துலங்குதிருமயிலாடுதுறைக்குவாயுந்திசையி
லிலங்கரையோசனைதூரத்தென்னுமுளதொருதான
மலங்குடரிதகிவனமென்றதையுரைப்பரத்தலத்து
மலங்கலின்ஞானம்பிகையோடியோகீசன்மகிழ்ந்தமர்வான். (௧௧)

வடதிசையோர்குரோசத்துமாஞானநதியுண்டு
குடதிசையோகீசனெதிர்குளிர்சூலத்தடமுண்டு
படர்நிருதித்திசைநெடுமால்பண்ணியவண்புனலுண்ட
விடர்தபுவாயுத்திசையிலிலக்குமிதீர்த்தமுமுண்டால். (௧௨)

எற்றசிலைக்காமனைக்கண்ணெரிக்குணவுசெய்திரதி
போற்றநெடுமாலிரப்பவுயிர்கொடுத்துப்புரந்ததலஞ்
சாற்றரியபெருங்கம்பஞ்சலசையடைந்திரித்ததல
மாற்றரியவடிவேலான்வணங்கிவரம்பெற்றதலம். (௧௩)

அனையதலந்தனக்கிணையாயமைந்ததலமெங்குமிலை
புனைகழற்காலிராகவநீபொருந்துறவத்தலஞ்சார்ந்து
துனைதரநீர்க்கடனியற்றிற்சொல்லமுடியாதுபல
மனையவளுந்தம்பியுஞ்சூழ்தரவாங்குமருகென்றான். (௧௪)

என்றமுனிவனைப்பணியாவெழுந்தொருதம்பியுமனையும்
பின்றொடரவரிதகிமாவனம்புகுந்தான்பெருங்காத
லூன்றியெழுவிதிப்படியேசூலதீர்த்தம்படிந்து
சென்றுகடுவடிமுளைத்ததிப்பியமூர்த்தியைப்பணிந்து. (கரு)

பொங்கருண்ஞானும்பிகைதன்பொற்றாளுமுறப்பணிந்து
மங்கலமாந்துதிமுழக்கிமாறாப்பேரன்புபுனைந்
தங்ககன்றியோகிசனைதிரைக்குரோசத்தளவிற்
றங்கவொருசிவலிங்கந்தாபித்தான்றன்பெயரால் (கசு)

ஞாலம்விரும்பொருதீர்த்தநலமுறவவ்விடத்தமைத்துக்
கோலநறுநீராட்டிக்கூவிளங்கொண்டருச்சித்துச்
சாலவுமிவ்வாறுபலநாள்பூசைதகச்செய்து
சீலமிருதுதிசெய்வான்சிலைத்தடக்கையிராகவனே. (கஎ)

வேதவாம்பரியுடையாய்வேதவான்சிலம்புடையாய்
வேதபாதுகையுடையாய்வேதகோவணமுடையாய்
வேதவாதனமுடையாய்வேதமாவடிவுடையாய்
வேதமாமொழியுடையாய்வேதநாயகசரணம். (கஅ)

மலருறைவோனைப்படைப்பாய்மாயவனேயாய்ப்புரப்பா
யுலரும்வகையில்லாதவுருத்திரனேயாய்த்துடைப்பா
யலருமருட்குணக்குன்றேயாராதவின்னமுதே
பலருமுவந்தேத்திடுநின்பாததாமரைதொழுதேன். (ககூ)

என்றுதுதித்திடுசூரிசிற்கெம்பிரானருள்சுரந்து
நன்றுமகிழ்ந்தனமின்னேநகுசூலத்தடந்தீரத்
தொன்றுவிதிப்படிபிண்டமுதவுதிலாஞ்சலியுஞ்செய்
கன்றுதலிலாதநிருதித்திசையுளதோர்கனதீர்த்தம். (உ0)

அன்னகரியவன்றீர்த்தத்தகன்கரையோர்சிராத்தஞ்செய்
முன்னவஃதொன்றுபதினுயிரஞ்செய்முழுப்பலனு
மென்னபகைமேவிடினுமிரித்துவிசயம்பெறுவாய்
மன்னவபோவென்றுரைத்தான்மகிழ்ந்திராகவன்பணிந்து. (உக)

யானுற்றுமித்தடத்தேயார்வந்துமூழ்கினைத்
தானுற்றும்பூசையினார்தாமெலாந்திருவுறுக
வானுற்றும்பிதிரர்களுமகிட்சியுறவருனென்று
ஞானுற்றுங்கொடியுடையானற்றாகவருள்புரிந்தான். (உஉ)

புறவிடைகொண்டெழுந்துபுனல்பொங்குகுலத்தடம்போ
யறவிடையான்பாதநினைந்தப்பனேற்றிகெனப்
பெறலரும்பிண்டங்கொடுத்துப்பேசுதருப்பணஞ்செய்தான்
றிறமலிவிட்டுணுதீர்த்தஞ்சென்றுசிராத்தம்புரிந்தான். (௨௩)

மன்னுதசரதன்றோன்றிமகிழ்ந்தேனென்புண்ணியத்தான்
மின்னுசுவர்க்கத்தடைந்தேன்மேதகுமித்தலத்தடைந்தே
யுன்னுதருப்பணமாதியுஞற்றியவுன்புண்ணியத்தால்
பன்னுகையிலையையடைவேன்பார்நீயென்றகன்றனனே. (௨௪)

தந்தையுரைத்ததுகேட்டுச்சானகிநாயகன்மகிழ்ந்து
சிந்தைகளிப்புறப்பின்னுஞ்சிலநாளங்கினிதமர்ந்து
நிந்தையிலாக்கடுமூலநின்மலனாருள்பெற்று
முந்தைவனம்போயமர்ந்தான்முற்றுணர்ந்தமுனிவரரே. (௨௫)

இராமலிங்கப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪௯௩.

# திருவிழாப்படலம்.

கனிவிராவுகடுவனத், தனியனாகியதம்பிராற்
றினியனாயவிராகவன், புனிதமாவனம்புக்கபின். (௧)

சானகிப்பெயர்த்தையலைக், கானகத்திற்கவர்ந்துபோ
மீனமுற்றவிராவணன், னூனமுற்றறச்சாடுவோன். (௨)

அரக்கர்கோன்முதலாகிய, விரக்கமில்லவர்யாவருங்
கரக்கமாய்த்துக்கழித்தபின், புரக்குஞ்சீதைபொருந்தவே. (௩)

ஆர்ந்துமேவுமயோத்தியைச், சார்ந்துமாமுடிதாங்கினான்
வார்ந்துநீதிவழிப்பகை, தீர்ந்துசெங்கோல்செலுத்துநாள். (௪)

மதித்தவாழ்க்கைமருவியே, பதித்தஞாலம்பரிப்பவன்
கதித்தஞானக்கடுவடி, யுதித்தநாதனையுன்னினான். (௫)

வேறு.

தந்தையுன்மகிழ்ச்சிமேவத்தகுபெருஞ்சிறப்பும்போரி
னிந்தையின்மிகையுமெய்தநின்மலக்கருணைசெய்த
வெந்தையைமறந்தேனந்தோவென்செய்தேன்பாவியேனெந்
றந்தையின்முனிவரோடுமன்புமீதூரக்கூறி. (௬)

தழையுமேரம்பர்சரவணபவர்சீர்ச்சந்திரசேகரராயாரும்
விழையுமொண்சோமாஸ்கந்தரானந்தவல்லியொத்திமொடநடராசர்
பிழைபறவணிவோருள்ளம்விட்டகலாப்போருட்காமசங்கார
ருழைபகலாதமற்றுளவாரேற்றொரான்மொளிசெய்திருவுருவம். (௧௫)

விடைமயிலன்னமாருவாம்புரவிவெள்ளோடாலியானைவெம்பூத
முடையவன்கயிலைசர்ப்பகாமதேனுவுமையிலாப்பலவூர்தி
யிடைகொடிகுடைசாந்தாற்றிசாமரையோர்விளங்குறுமொலியலால்வட்ட
மடைதருமிவைமுன்விருதுபாத்திரங்களாதியபலவுநன்கமைத்தான். (௧௬)

மறையவர்முதலோரமர்தரற்கேற்றமாளிகைவயங்குபன்மடங்க
ணிறைதருமன்னசத்திரமிருந்தில்லைமுதல்யாவையுமமைத்தும்
குறையறபாவும்படைத்தனனென்றுகோசலைமைந்தன்முனுரைத்தா
னறைகமழ்தாரானமைச்சரோடெழுந்துநலமெலாநோக்கியுண்மகிழ்ந்தான். (௧௭)

சிகரப்பணிக்குவேண்டியசனங்கள்சிதைதராவிலாவகைநாட்டி
யனகநல்லாதிசைவரானன்றுளமைத்தபொற்கும்பநீராட்டி
முனகர்சாராததம்பிரான்றிருமுன்மூவிருகாலமும்பொலியப்
பனகமென்பாயறுறந்தவன்பூசைபண்ணுவித்தேத்துபுபணிவான். (௧௮)

முதியசீர்வேதாகமப்படியுறப்பூன்றநாடொறும்வழுவாமற்
பதியநன்காற்றிமேடமாமதியிற்படர்தருசுக்கிலபக்கந்
துதியவாந்திதியட்டமியுறுநாளிற்றுவசவாரோகணஞ்செய்து
திதியவாமுலகமன்னவரெவற்குந்திருமுகம்விடுத்துறக்கூட்டி. (௧௯)

காவணம்புனைந்துமாலைதோற்றிக்கருப்பொடுகதலிகள்யாத்துப்
பூவணமடவார்மைந்தர்களுவந்துபுதுநகர்நனியலங்கரிக்க
மாவணமகுடகுண்டலம்வாகுவலயமுத்தாரமதாணி
தூவணப்பலபட்டிவைமுதற்பலவுஞ்சோதிநாயகற்குவந்துதவி. (௨௦)

காமருகொடியேற்றினதினந்தொட்டுக்காலையிற்சிவிகைகண்மீது
மாமருமாலையவரவற்கிணைந்தவணங் [illegible] ரகணமீதும்
பாமருமைவர்களும்வரப்புரிந்துபசருமெட் [illegible] நாளி
ஞமருவியசீர்காமவேடகனநலமுறக்கண்டுகும [illegible] (௨௧)

ஒன்பதாந்திருநாளிரதமைந்திலுமிக்கோங்குமைவரும்வரப்புரிந்தே
யன்பதாமறுநாள்சூலநற்றீர்த்தமத்திரதேவரையாட்டி
யின்பதாமிரவில்விடைக்கொடியிறக்கியெண்ணில்கோதானம்பூதான
மன்பதாம்புயந்தருள்செயும்பிராற்குவழங்குபுபணிந்தனனிராமன். (௨௨)

இத்தகு திருநாளாதியோடந்தமெனப்படுபத்துநாள் களினு
முத்தமமறையோர்விலாப்புடைவீங்கவுண்டிடும்படி திருவமுதும்
புத்தமுதனையசுவைக்கறியமுதும்பொங்குபாறயிர்கறுநெய்யுஞ்
சுத்தமிக்கோங்குசிற்றுணவகையுந்தொலைவறப்படைத்தனன்பின்னும். (௨௫)

வேண்டியயாவும்வெறுத்திடக்கொடுத்துமேவுமாலயப்பணியாள
ரீண்டியபொருண்முன்யாவையுங்கொள்ளவெடுத்தெடுத்துவகையிற்கொடுத்துத்
தூண்டியசோதியிராமலிங்கத்தைத்தொழுதுகோயிலுமினிதமைத்துப்
பூண்டியல்செல்வம்பொலிதரப்பொருத்திப்பொருந்துயோகீசன்முன்னடைந்து.

வினைதபுவீரட்டேசநாயேற்குவிடைநோடுத்தருளெனப்பணிந்து (து
வனைமொழிஞானாம்பிகையையுந்தொழுதுவரமெலாங்கொள்ளைகொண்டெழுந்
கனைகடற்படையுஞ்சிதையாதியருங்கலந்துசூழ்வரநெடுந்தேர்மே
னைமலர்த்தாரான்சென்றனனயோத்திநண்ணுபுகளித்துவாழ்ந்திருந்தான். ( )

திருவிழாப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௫௨௧.

——:0:——

# குறுக்கைப்படலம்.



இன்றுமறைக்குமெட்டாதவிறைவன்மருகனுகிவரப்
பன்னுமுலகமீன்றுளைப்பயந்தபெருமையுடையதுகோ
மன்னும்புலவர்நாளுளும்வாழ்த்துஞ்சிறப்புற்றதுபுயலு
மின்னுந்தவழவுயர்ந்தோங்கிவிளங்குமிமயகிரியமர்வோன். (௧)

போர்க்கவாகும்புளகமெழப்புலவர்பலருமரகரவென்
றார்க்கவாகுநயந்தேறியத்தாபவநின்றடியேனை
யீர்க்கவாகுவலயம்வியப்பெய்தவென்றுதியாணிக்குந்
தீர்க்கவாகுமுனிவனெனத்திசைபோங்கீர்த்தியுளாெனொருவன். (௨)

மறைகூறரியபூதியுங்கண்மணியுந்திருவைந்தெழுத்துமே
பொறைகூர்பொருளென்றுளத்திலுறப்பொருத்தியருத்திபூண்டியப்ப
னைறைகூர்குழலார்காமமுதனவிலுங்குணமோர்பதினெட்டும்
மிறைகூர்தரச்செற்றொழித்தொழியாவிமலானந்தமனுபவிப்பான். (௩)

பந்தமுழுதுமறுத்துமுத்திப்பண்பினடைதற்கேதுமறை
யந்தமுதல்வனடிக்காட்சியனையகாட்சியுறற்கேது
முந்தவெழுந்துதீர்த்தமெலாமுழுகியனையானருளினமர்
சந்தமிகுமெண்ணருந்தானந்தரிசித்திடலென்றுளங்கொள்வான். (௪)

நெடுங்கைமுனிவனிவ்வாறுநெஞ்சுணினைந்துநிறையன்பிற்
கடுங்கைமலையீருரிபோர்த்தாய்காலகாலாகாபாலி
தொடுங்கைவளையாளொருபாகாதொழுவேனெண்ணமுடித்தியென்றே
பொடுங்கைவழியாளொருப்பட்டானுள்ளதலமெலாம்பணிய. (ரு)

மன்னும்பெருமான்சேதாரம்வதரிவனநற்கோகர்ணந்
துன்னுங்குருக்கேத்திரஞ்சயிலந்துவரையயோத்திமாகாள
மின்னுநரநாராயணநைமிசமுன்னானதலம்பலவும்
பன்னும்புகழ்சானெடுங்கைமுனிபரிந்துசென்றுதொழுதேத்தி. (சு)

வேறு.

பலர்புகழிந்திரநீலப்பருப்பதத்தும்பெருங்கருணை
யலர்தரவம்மானுறையுமனேகதங்காவதத்துஞ்சென்
றுலர்தவிலாப்பெருகன்பினுள்ளுருகவிருவிழியு
மலர்தருதண்புனல்வாரவந்தித்துப்புறம்போந்து. (எ)

அம்மைதழுவக்குழைந்தேயமலனமர்பதிவணங்கி
யம்மைதலையானடைந்தேயடைந்ததிருப்பதிபோற்றி
வெம்மையுறுவரிசிலைக்கைவேடர்பிரானுதவியூன்
வெம்மையினுண்டனுதிசைவர்வீற்றிருக்கும்வெற்பிறைஞ்சி. (அ)

நாவலூரவதரித்தநம்பியெழிற்சங்கிலியைப்
பாவலோர்புகழமணந்தருளியவான்பதிவணங்கி
மேவுமாறமர்கோயிலுள்ளாயேயெனவிரைந்து
கூவநேர்வந்தொருகைக்கோல்கொடுத்தார்பதிதொழுது. (கூ)

பொடிபடுசாம்பருமெலும்பும்பூவைதிருவுருவான
படிபடுசீர்ப்பெருந்தலமும்பரமனார்திருமறையை
யொடிபடுதலில்லாமலோதுவிக்குமொருதலமுங்
கடிபடுவெண்டளவுகொடுகளிறுதகைமாத்தலமும். (க0)

பரவுமருட்பெருங்காழிப்பாலறுவாயர்புகுந்
துரவுமலிநெடுமாலையொருசிவனுக்கியதலமுங்
கரவுதவிர்ந்திருகழுகுகாத்திருக்குமொருதலமு
மிரவுகொடுசெந்தாருக்கிறையனநல்கியதலமும். (கக)

ஆட்சிகொண்டாரெனும்பெயரோடமலருறைதருதலமு
மாட்சிதருமருந்துகொடுவானவராட்டியதலமுங்
காட்சிபெருமூர்க்கனூரவதரித்தகனதலமு
மூட்சியுறுவக்கிரனைமுனிந்துமாட்டியதலமும். (கஉ)

மாயவனாகியமாணிவழிபட்டபெருந்தலமு
மாயபுரமொருமூன்றுமட்டபிரானமர்தலமு
மேயவிருவருக்காகவெந்தழலினுருக்கொண்டு
தாயனையபெருமானார்தனிநின்றபெருந்தலமும். (௧௩)

விருத்தவடிவொடுபெருமான்வீற்றிருக்குமொருதலமுந்
திருத்தாரிசுசுந்தரரைத்தடுத்தாண்டசீர்த்தலமுங்
கருத்தமையநாவரசர்கரையேறப்படுதலமும்
பொருத்தமுறச்சூலம்விடைபொருத்தியவர்க்கருடலமும். (௧௪)

தண்டுறைவலூரருக்குத்தவநெறிதந்தருடலமும்
விண்டுறைநம்புகழுமவரைதரித்தமெய்த்தலமுங்
கண்டார்சம்பந்தருக்குச்சிவிகைதருகனதலமு
நண்டுறைவந்தககவகாலனுயிர்துலைத்தநற்றலமும். (௧௫)

குலவுமறைமுடிப்பெருமான்கூத்தாடும்பெருந்தலமு
நிலவுபுகலிப்பனவர்நிறைவுற்றநெடுந்தலமு
முலவுமயிராவதம்வந்துலவையடையொருதலமுங்
கலவுகொடுங்காலனுயிர்காற்றிவிளங்குறுதலமும். (௧௬)

கோடாதநளனடையக்கொடுங்கலிதீர்த்தருடலமும்
வாடாதசுந்தரர்க்குவாம்பரிதந்தருடலமும்
வீடாதமறைநான்கும்விழைந்தேத்துபெருந்தலமு
மூடாதவருண்முனிவனுவந்துகளிப்புறவணங்கி. (௧௭)

வெட்டுமிடந்தொறுங்குமிறிவெள்ளமெழுபெருந்தலமு
நட்டுமகிழ்வச்சிரமேநன்னிழல்செய்தலமுங்
கட்டுமசகசப்பெயராற்கதித்தோங்குமொருதலமுங்
பெட்டுமகிழ்வாசகஞ்சொல்பெருமானைத்தருதலமும். (௧௮)

காளைவடிவடைந்திறைவன்கருணைபுரிந்திடுதலமும்
வேளையெரித்தருளிறைவன்பின்னனையபொன்னனையாள்
வாளைநிகருகிர்க்குறிகள்வயங்குகபோலம்புனைந்தே
யானையுறவத்திமலராக்கியமர்தருதலமும். (௧௯)

யானைமகன்மன்றலைவேளியற்றிமகிழ்தருதலமு
மீனைநிகர்விழியுமையைவேட்டிறைவனமர்தலமும்
வானைவணக்கிடுமேடுவயங்குறத்தங்கிடுதலமு
மேனைநிலமுதல்மூன்றுமினிதுறக்கண்டிடுதலமும். (௨௦)

துணைமாலைதோடுழுவத்தூயபிரானமர்தலமுங்
கணைமாலையிருதலையார்க்காய்ந்தபழிகடிந்தலமும்
பிணைமாலையொருமுனியெம்பிரானாகப்புரிதலமும்
மணைமாலையிறைபரவாரணங்குதோளிடுதலமும். (௨௧)

வேயீன்றமுத்தெனவெள்விடைப்பிரானமர்தலமும்
வாயீன்றமறைபதிகம்வயக்கியவாரூரனைக்கொண்
டேயீன்றவிங்கடையென்றிறையேவவெள்ளானை
தாயீன்றவன்பினொடுசார்ந்தபெருந்தனித்தலமும். (௨௨)

அரசுபொலிசபையாடுமம்பிகாபதிதலமும்
விரசுபுனறிரிகொடியவெம்முதலைமதலைதரப்
பரசுமொருபதிகங்கொள்பண்ணவன்மேவியதலமும்
வரசுகுணவுமைபாகம்வயங்கவமர்வான்றலமும். (௨௩)

இன்னமுங்காகம்பறவாதெரிவீசுமொருதலமும்
மன்னமுமேனமுந்தெரியானன்னையாயமர்தலமுந்
தன்னிகரில்வெண்ணாவலடியமர்வார்தந்தலமு
மின்னிசைகூர்நந்திதவமியற்றியருள்பெறுதலமும். (௨௪)

பிரமனார்தலையரிந்தபெருமானாருறைதலமும்
பரமனார்மடந்தையொருபாகனாரமர்தலமு
மரவணிவார்தமைத்தாமேயரிச்சித்துமகிழ்தலமு
முரவுரகம்பணிந்தேத்திவுயர்வுபூண்டெழுதலமும். (௨௫)

மகத்துவமார்கற்கடகம்வணங்கிவழிபடுதலமு
மகத்தியரோர்முக்கோடிபரிச்சித்தபெருந்தலமுந்
தகத்தழையுமடமயிலைத்தம்பிரானணைத்தெழுந்து
மிகத்தழையுமாசிநிழல்வீற்றிருக்குமொருதலமும். (௨௬)

வானாடுவெறுத்துவருவள்ளலமர்பெருந்தலமுங்
கானாடுகளிறுரித்தகண்ணுதலோனமர்தலமு
மூனாடுசலந்தரனையுயிர்குடித்தோனுறைதலமும்
பானாடுகோவுருவம்பரமனடைந்தருடலமும். (௨௭)

தக்கனார்மகஞ்சிதைத்ததம்பிரானமர்தலமு
மிக்கமகவரிந்தூட்டவெம்பசியுற்றார்தலமுந்
இக்களவுவாகீசர்சென்றுபுகுமொருதலமு
மொக்கணியிலருள்புரிந்தருமுதல்வனார்பெருந்தலமும். (௨௮)

அண்டமுழுவதுங்கிளையினக்கணமேவிக்கினந்தீர்த்
தெண்டகலைப்பரையாருமேம்பர்பாலடைந்தாற்
கண்டபொழுதருளுமென்றடைந்தகாலையிற்றுதை
கொண்டகருத்துணர்ந்தவருங்குறுங்கையாயிருந்தார். [௪௫]

அடியவர்விக்கினந்தீர்க்குமையனேகவடிவாழ்
நெடியமுதல்பூசைக்குநேர்ந்ததுவிக்கினமென்று
கொடியசெங்கையிலன்பங்குறுங்கையாயினனென்று
படியிலுறப்பணிந்தெழுந்தான்பத்தியோருருவானோன். [௪௬]

எழுந்தமுனிவனைநோக்கியானைமுகப்பெருமானார்
தொழுந்தகையகுலமுனிவாதூரதநுயர்ப்பரவை
யழுந்துகலையொழியாமுமவ்வாறேயிருக்கின்றேஞ்
செழுந்தவவாழ்வுடையீயேதெரியப்பாரென்றுரைத்தார். [௪௭]

என்றபொழுதிக்கலத்தினியப்பிதுவோவெனக்கலங்கி
யொன்றுமுறையானினிமேலுயிர்வாழ்வதில்லையெனக்
கன்றுமனத்திருமுனியோர்கல்லிடைத்தன்றலைமோத
வன்றுகிழித்தெழுந்ததயனரிக்கரியதொருதிருக்கை. [௪௮]

தூயபெருந்திருக்குறிப்புத்தொண்டரிறவாதளிப்பா
னாயபெருந்துறைக்கருங்கல்கீண்டெழுந்ததன்றொருகை
யேயவிவர்புறந்திடகதற்கீண்டெழுந்ததின்றொருகை
நாயனருள்விளையாட்டைநாமோசொற்றிடவலியோம். (௪௯)

தலைதகரமுட்டுமொருதடஞ்சிலையிற்கீண்டெழுந்த
நிலையுடையபெருந்திருக்கைநேர்நோக்கியதிசயித்துக்
கலைவரியகல்லினுக்குங்கைகீளுமித்தலத்தோர
குலைவரியவென்னெடுங்கைகுறுகுமாகவென்றான். (௫0)

திருந்துவிநாயகற்குரைப்பான்சென்றோன்மற்றவரெனக்கும்
பொருந்துகரமப்படியேபுந்தியுறவுணரென்றார்
வருந்துதலினுயிர்விடுதல்மாண்பெனக்கன்றமட்டவலை
னிருந்துவெளிப்பட்டதுகையென்றெனிலென்னெனவுணர்வேன்.

வேறு.

என்றுமாமுனிவனெண்ணியிரங்கிடுபொழுதுவெள்ளி
குன்றுநேர்விடைமேற்றெய்வக்கோமளவல்லியோடு
மன்றுபல்கிரணகோடிசூரியருதித்தாலென்ன
வன்றுமாலயனுங்காணாக்கடவுணேர்தோன்றிநின்றான். (௫௨)

கண்டனன்முனிவனன்புகரைகடந்தெழுந்துபொங்க
மண்டனிற்பணிந்துவீழ்ந்தானெழுந்தனன்வயங்குமோலி
துண்டவெண்பிறையுமானுஞ்சடைமுழுமழுவுமால
முண்டகண்டமுங்காண்டோறுமுவகையங்கடலிலாழ்வான்.

ஆடுவன்சென்னிமீதுதுணைக்கரங்குழிந்துகூப்பித்
பாடுவன்புகழையென்னபாக்கியஞ்செய்தேனென்
றோடுவனுடனேமீள்வனுமாதரசங்கராவென்
றாடுவன்பணிந்துபோற்றியன்பிறைஞ்சித்துதிக்கலுற்றான். (௫௪)

வேறு.

தேவாசின்மயஞானச்செழுஞ்சுடரேயின்று
மாவாபன்மறைதொடர்ந்துமறிவரியபொருளே
கோவாமுத்தேமணியேகுணக்குன்றேயென்றுந்
தாவாநின்னடிதாழாத்தலையென்னதலையே
தலைவநின்னடிதாழாத்தலையென்னதலையே. (௫௫)

பெரியாயெவ்வுலகினுக்கும்பிறப்பிறப்பெஞ்ஞான்று
மரியாயங்கணசுகுணவானந்தபோதத்
திரியாயன்றெழுந்தவிடமெடுத்தயின்றகண்டங்
கரியாய்நின்னுருக்காணாக்கண்ணென்னகண்ணே
கலந்தாய்நினனுருக்காணாக்கண்ணென்னகண்ணே. (௫௬)

மருவாவென்னுயிர்கடொறும்வயங்குமியல்புடையா
யொருவாமும்மலமுமொழித்தொன்றளிக்கும்பரமா
கருவாகிக்கண்ணாகிக்கண்ணுண்மணியாகுந்
திருவாநின்புகழ்கேளாச்செவியென்னசெவியே
செல்வாநின்புகழ்கேளாச்செவியென்னசெவியே. (௫௭)

பெருந்தேவரறிவரியபேரொளியாய்ஞானந்
தருந்தேவுமாயுணரிற்றானகலாததுவா
யிருந்தேயுள்ளமுதூற்றுமின்பமேபிறவி
மருந்தேநின்புகழ்பாடாவாயென்னவாயே
மணியேநின்புகழ்பாடாவாயென்னவாயே. (௫௮)

திருத்தேவுநான்முகனுந்தேடரியபொருளே
யுருத்தேறும்வினையகலவொழித்தருளும்வெளியே
மருத்தேதீயேபுனலேமண்ணேயெண்ணடியார்
கருத்தேநின்பணிசெய்யாக்கையென்னகையே
கண்ணேநின்பணிசெய்யாக்கையென்னகையே. (௫௯)

வெங்காளமுண்டிருண்டமிடற்றிறையுடையாள்
பங்காளசங்காளும்பாய்விடையொன்றுடையாய்
கொங்காளவமைக்தநறுங்கொன்றையாய்குலவு
சங்காளநினைச்சூழாக்காலென்னகாலே
கண்ணுதலேநினைச்சூழாக்காலென்னகாலே. (௬௦)

நத்தாவையகம்புரத்திநான்முகவாக்குதியென்
றொத்தார்வமுறவைப்பாற்குவந்தளிக்குமனாதி
முத்தாபல்லுலகினிக்குமுதல்வாமுப்புரங்கொ
ளித்தாநின்னடிநினையாநெஞ்சென்னநெஞ்சே
நிமலாநின்னடிநினையாநெஞ்சென்னநெஞ்சே. (௬௧)

பற்றறவெறுப்பொறியவொளிபடுநீறுபூசி
யுற்றாமிளிர்சண்மணியுமொருங்குபூண்டெழுத்தைந்
தற்றுவிலகாமலுளத்தமைத்துமுத்திக்கைகளும்
பெற்றாவினைப்பேசாதார்பிறப்பென்னபிறப்பே
யத்தநினைப்பேசாதார்பிறப்பென்னபிறப்பே. (௬௨)

மின்னுடையசிறுமருங்குற்பேரமைத்தோள்வெண்முறுவற்
பொன்னுடையவொருபாகாபுத்தேளிர்பெருமானே
மன்னுடையநெடுஞ்சூலவாவியிடைத்தோய்ந்துபுகுந்
துன்னுடையதளிப்புராவுடம்பென்னவுடம்பே
யொருவாநின்றளிப்புராவுடம்பென்னவுடம்பே. (௬௩)

பையரவமரைக்கசைத்தபரமாபல்லுயிர்க்கும்
வெய்யமலம்வீட்டவரிதசிவனம்வீற்றிருக்குஞ்
செய்யமெய்ஞ்ஞானம்பிகைதோள்சேர்வீரட்டேசா
வையநினையறியாதாரறிவென்னவறிவே
யமலநினையறியாதாரறிவென்னவறிவே. (௬௪)

வேறு.

இவ்வண்ணந்துதியாநிற்குமுனியிருகையும்பற்றிச்
செவ்வண்ணமேனியம்மான்றிருமுகமலர்ந்துநாளு
மவ்வண்ணமாகநம்மையறிபவனுனக்கென்வேண்டு
மெவ்வண்ணங்கேட்டபோதுமிலையெனவில்லையென்றான். (௬௫)

முனிவனுமன்பிற்றாழ்ந்துமொய்த்தபேருவகைபொங்கப்
பனிவருங்கற்பநாட்டுப்படர்சிறுவாழ்வும்வேண்டே
னினிவருமயன்மால்போகமெள்ளளவேனும்வேண்டேன்
கனிவரும்பரநின்பாதக்கலப்பொன்றேவேண்டிநின்றேன். (௬௬)

என்றலுங்கிளைநாட் பூசையியற்றிநீ பெறுகவென்றான்
குன்றவில்லாளிவென்கை குறுக்கியதென்னையென்று
வென்றமாமுனிவன்கேட்பவிடையவன்முறுவல்பூத்து
நன்றெனத்துணைத்துவோர்தெளிவெனவிலலுற்றான். (௬௭)

உமையிளையொருவிபோகமுற்றுநாமிருந்தஞான்றே
யமைதருநற்குலத்தாலாக்கியதீர்த்தமீது
சமைதரவறுபத்தாறுகோடிதீர்த்தமுந்தாபித்தோ
மிமையவர்நாட்டுக்கங்கையிதனின்மேற்சிறந்ததன்றே. (௬௮)

ஆதலினின்னீர்கொண்டேயாட்டுவான்வானயாற்றித்
சாதலினீட்டுமுன்கைகுறுக்கினங்கண்டாயற்றுத்
கோதறவின்றுதொட்டுக்குறுக்கைமாமுனிவனுதி
போதகமுகத்தெஞ்சேயுமிப்பெயர்பூண்டுவாழ்க. (௬௯)

இந்நகர்தனக்குமிப்பேரெய்துகவிளையதீர்த்தந்
தன்னமர்காதலோடுமூழ்கினர்சார்கதம்மைப்
பன்னமிக்கினியவாகின்றதியினைப்பகர்வோர்நாளு
முன்னருமின்பந்துய்ப்பாரெனமொழிந்தகன்றான்முன்னோன். ()

மறையுளான்மறைந்தபோதுமாமுனிமகிழ்ந்தெழுந்தா
குறையுறாச்சூலதீர்த்தங்கொண்டினிதாட்டியாட்டி
நிறையுமாகமஞ்சொல்லாறேயாயிரவருடநேசித்
துறையுமாபூசைசெய்தாளென்றியொன்றாவின்புற்றான். (௭௧)

மதுமலர்க்கணைவேட்செற்றவள்ளலார்வயங்குமவ்வூ
ரதுமுதற்குறுக்கையென்றேயாவருமெடுத்துச்சொல்வார்
முதுபுகழ்மிகுகுறுக்கைமுனிவரன்காதைகேட்டோர்
புதுவளப்போகந்துய்த்துப்புண்ணியனடிக்கீழ்வாழ்வார். (௭௨)

குறுக்கைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௫௯௫.

—:0:—

## கண்ணன்பூசைப்படலம்.



துதியதுகுலத்துவாழ்வசுதேவற்குந்தேவகிக்கும்
விதியதுவலியான்மாயோன்விரும்புபுத்திரனாய்த்தோன்றி
மதியதுமாறுபட்டமன்னராதியரைமாட்டிப்
பதியதுதுவரையாகப்பற்றிவாழ்ந்திருக்குநாளில். (௧)

மாவலிமைந்தன்வாணன்மாதேவன்றனைக்குறித்து
மேவருந்தவன்றூறாண்டுவிருப்புமாதவங்களாற்றித்
தாவிலாயிரங்கையோடுசம்பத்தும்வலியுஞ்செந்தீச்
சோவுமற்றியாவும்பெற்றுச்சோணிதபுரத்துவாழ்வான். (௨)

தானவர்மருக்கமோங்கமற்றவர்தாழத்தாழ்ந்தி
மானவெவ்வலிவாழ்வாணன்வாழ்வதுகுறித்துக்கண்ணன்
சேனைலர்தும்பைவேய்ந்துசெருச்செய்வானவனோடேற்று
மானமும்வலியுந்தோற்றுவாட்டமுற்றோடினானே. (௩)

பன்முறைவாணனோடிப்படியமரேற்றுத்தோற்று
நன்முகில்வண்ணனஞ்சிதன்னகரிருக்கும்போது
பொன்மலையனையகொங்கைபூரிப்பமருங்குல்வாட
வன்மனத்தசுரன்செல்விமங்கையம்பருவமுற்றாள். (௪)

திருந்தியதோழியாயசித்திரலேகைதன்பாற்
பொருந்தியவாணன்செல்விபுருடரிற்சிறந்தார்தம்மை
யிருந்திறப்படத்திற்றீட்டியெனக்குநீகாட்டுகென்றா
ளருந்திறலெழின்மிக்காரைத்தீட்டிமற்றவளுங்காட்ட. (௫)

சிறந்தவோருருவங்கண்டித்திருவனாரென்றுகேட்டா
ளறந்தவாக்கண்ணன்மைந்தன்மகனநிருத்தனென்றாண்
மறந்திடாதவன்வனப்புமனக்கொடுதுயிலுங்காலை
யுறந்தபேரழகன்சேர்ந்தான்கனவகத்தின்பமோங்க. (௬)

விழிதிறந்தனளன்னோனைக்கண்டிலள்வெதும்பிமாழ்கி
மொழிதடுமாறச்சோர்ந்துமூர்ச்சித்துவிழுந்தாளப்போ
தழிதரேலென்றுதேற்றிக்கட்டிலோடவனைத்தோழி
வழிவருநாளிராவிற்கொணர்ந்தனண்மாயையாலே. (௭)

கண்டனள்காமங்கொண்டகாரிகையுவந்தணைத்துக்
கொண்டனள்கண்விழித்துக்கொண்டனனவனுமென்மேன்
மண்டுவெங்காமம்பொங்கமணந்தனனனையாளின்ப
முண்டுநீங்காதுவைகக்கருப்பமுமுற்றாளன்றே. (௮)

கருப்பம்வந்துற்றதோர்ந்துகடுவலிவாணன்சீறி
விருப்பமர்காளைதன்னைப்பற்றிவெவ்விலங்குபூட்டி
யொருப்படுசிறையில்வைத்தானுணர்ந்துநாரதனன்றேபோய்த்
திருப்பொலிகண்ணன்மாட்டுச்செப்பினனனையான்சோர்ந்து. (௯)

# கண்ணப்பூசைப்படலம்

என்செய்வேன்முனிவரேநேயிகல்கொடுபலகாலேற்றும்
பொன்செய்தார்வாணன்மாட்டுப்பூண்டிலேன்வாகையந்தோ
மின்செய்பூண்மைந்தன்மைந்தன்விலங்குபூண்டங்குவாட
முன்செய்தீவினையாளிங்குவாடிட முடிந்ததென்னே. (௰)

மகதியாழ்முனிவன்கேட்டுவெள்ளிமலையொன்றுமஞ்சே
லகனிலப்பபறுயுள்ளபரிதிவனத்தைமேவித்
தகவுயர்மகிமைச்சூலத்தடம்புனல்குடைந்துமுக்கட்
பகவன்யோகிசன்பாதபங்கயம்பணிந்துபோற்றி. (௧௧)

பெருமையிற்சிறந்தஞானம்பிகையிருதாளும்போற்றி
யருமையிலிலிங்கமொன்றங்கருண்மலிதாபித்தே
பொருமையிற்பூசையாற்றியுறவரமிதப்பகொண்டு
கருமைவாளாற்றல்வாணன்கடுஞ்சமர்கடத்தியென்றான். (௧௨)

என்றலுந்தொழுதுபோற்றியிரும்புலிக்காவோன்மைந்தன்
றன்றிருவருள்சான்மேன்மைக்கண்ணனுட்டழைத்தெழுந்து
வென்றிகொள்வாணன்றிண்டோள்வென்றனைமின்றேயென்று
குன்றுதலில்லாமேன்மைக்குறுக்கைமாநகரமுற்றான். (௧௩)

சூலதீர்ப்படிந்துமேனிதுலங்கவெண்ணீறுபூசிக்
கோலமாருருத்திராக்கங்கொண்டபோன்பிற்பூண்டு
சாலவைந்தெழுத்துமெண்ணித்தம்பிரான்முன்புசென்று
னீலமாமேனிக்கண்ணனெஞ்சநெக்குருகிமாதோ. (௧௪)

படியுறத்தாழ்ந்துமீட்டும்பன்முறைசூழ்ந்துபோற்றிக்
கொடியிடைத்திருமெய்ஞ்ஞானம்பிகையையுங்குறித்தவ்வாறே
நெடிதுறச்சூழ்ந்துபோற்றிநிலவழலுறுதிக்கேகிக்
கடிதருளிலிங்கமொன்றுதாபித்தான்கசிந்துகண்ணன். (௧௫)

நகுமலர்த்தீர்த்தமொன்றுநாடுமவ்விடத்துண்டாக்கி
மிகுதிசெயன்னீர்கொண்டுவிரும்பிலிங்கத்தையாட்டித்
தகுநறுவில்வமாதித்தண்மலர்தழையச்சாற்றி
யுகுவினையுடையானிவ்வாறேராண்டுபூசித்தானே. (௧௬)

தன்னடிக்கன்பனன்புக்கிரங்கிநஞ்சாமிதோன்றி
மின்னருகழற்காற்கண்ணவேண்டியதுரைத்தியென்னப்
பன்னருமலர்கடூவிப்பதம்பணிந்தெழுந்துநின்று
தன்னமர்காதல்பொங்கச்சாற்றுவனிதனைமாதோ. (௧௭)

அடியனேன் றனக்குநின்பொன்னடிமலர்க்கன்புவேண்டுங்
கொடியனேன் மைந்தன் மைந்தன் கொடுஞ்சிறையொழியுமாறு
நெடியதோள்வாணனாற்றனீற்றிடும்வலியும்வேண்டு
முடிவிலாக்கருணைவாழ்வேமுனிவறவருடியென்றான். (௧௮)

கண்ணனிவ்வாறுகூறக்கருணையெம்பெருமான்சொல்வா
னண்ணன்மைந்நாகவெற்பிலருந்தவம்பலநாளாற்றி
வண்ணநம்பாற்கரேற்றவாத்தைநீமறந்துளாயோ
வெண்ணருமிவனைவேறலெண்ணியேகொடுத்ததன்றோ. (௧௯)

ஒருதினநம்பால்வெற்றியுறவையென்றுரைத்தவந்தத்
திருமொழிதவறுவண்ணந்தெரிதரவாணன்வாயில்
மருவுநாமினையெதிர்த்தல்மானவேற்றிரிவோஞ்சென்று
வெருவராவாணன்றிண்டோண்மேயகண்டேதிமாய்த்து. (௨௦)

காதலன்மைந்தன்பூண்டகாற்றளைவிடுத்துக்கொண்டு
தீதினின்னிருங்கைசேர்திசிறப்பநீபதிட்டைசெய்த
மேதகுமினையகோசம்விடாதுயாம்வாழ்வோமென்று
பூதரங்குழைத்தவெம்மான்புகன்றனன்மறைந்தானன்றே. (௨௧)

கண்ணனுண்மகிழ்ந்தெழுந்துகடுவெடிமுளைத்தவெம்மா
னண்ணரும்பதமுஞானம்பிகைநகுபதமும்போற்றி
யெண்ணருங்களிப்புநீடத்துவாரகையெய்தியாங்கு
வெண்ணகைமனைவிமார்க்கும்பெற்றதைவிரித்துக்கூறி. (௨௨)

அடுபடைத்தடக்கைக்கொண்டலணிந்தனனற்றைநாளே
படுமதக்களிறுந்தேரும்பாய்பரிக்குழாமுமற்றை
வடுவறுபடையுஞ்சூழமாமணித்தேர்மேலேறித்
தொடுகடன்முரசமார்ப்பச்சோணிதபுரத்தையுற்றான். (௨௩)

வாணன்வெம்படைகளெல்லாமண்மிசைமடியமாட்டிக்
காணருமனையான்றிண்டோட்கண்டேதியனைத்தும்போக்கி
மாணமர்மைந்தன்மைந்தன்வல்விலங்கொழித்துக்கைக்கொண்
டேணமர்துவரையெய்தியின்புற்றிருந்தான்கண்ணன். (௨௪)

மருவியகண்ணன்பின்புவயங்குறப்பதிட்டைசெய்த
திருவமரிலிங்கங்கண்டுபோற்றுவோர்விசையஞ்சேர்வர்
வெருவரும்போகந்துய்த்துமேதகவாழ்வார்பின்ன
ரொருவருஞ்சிவலோகத்தையுற்றுவாழ்ந்திருப்பர்மாதோ. (௨௫)

கண்ணன்பூசைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௬௧௮.

# பிரமலிங்கப்படலம்.



முந்தவோர்கற்பந்தன்னின்முராரியுந்தகைசான்மேய
சந்தநான்முகத்தோன்யானேபெரியனென்றனன்மாயோ
னெந்தவானவர்க்கும்யானேபெரியனென்றுரைத்தேற்று
வந்தநீபெரியனாவாயென்றுமான்மறுத்துச்சொன்னான். [௧]

நின்னையார்படைத்தாரந்தநெறியுணராதுகூற
லென்னைமாயவனேயென்றானீரிருமுகத்துச்செம்ம
லுன்னையான்படைத்தேன்பின்னுமொருங்குகாத்தலுஞ்செய்வேனின்
றன்னைநீயுணராதோதற்காவென்றான்சங்கபாணி. [௨]

இருவருங்கலகமிவ்வாறிழைத்திடற்கேதுவான
மருவருமகந்தைதீர்ப்பான்மறைமுடியமர்மாதேவ
னொருவருமிருவர்காப்பனோங்குபேரொளிப்பிழம்பாய்
வெருவரும்படியெழுந்துவிண்ணையூடுருவிநின்றான். [௩]

கண்டவரச்சத்தோடுகருத்திறம்பூதுமேவக்
கொண்டகாணமுமுள்ளாராய்க்குலவுசாமிருவோரும்பற்
றுண்டகோளுலகமெல்லாமுணருமாறுணர்த்தமேல்கீ
ழண்டமுற்றளந்தசோதியடிமுடியளப்போமென்றார். (௪]

சென்றநானடியளந்துதிரும்புவனென்றான்மாயோ
னின்றநான்முடியளந்திங்கெய்துவனென்றான்பூவோ
னென்றுமாறிவரிவ்வாறேயொட்டினருக்கமிக்கு
நன்றுநாங்கோடலெந்தவுருவெனநாடியோர்ந்தார். (௫)

வெள்ளியவராகமாகிமேதினிதுளைத்துச்சென்றான்
வள்ளியமாயோனெம்மான்மலரடிகாண்பேனென்றே
யொள்ளியவன்னமாகியொருமுடிகாண்பேனென்று
துள்ளியமறையோன்விண்மேற்றுனைதரப்பறந்தனன்றே. (௬)

கோலமாவுருவங்கொண்டுகுவலயந்துளைத்துச்சென்ற
சீலமோராதமாயோன்சிறிதுமோராரனேயாகிச்
சாலநாள்வருந்திமேலுஞ்சார்தரவலியொன்றின்றி
ஞாலமேல்வந்துசோர்ந்துவிழுந்தனனடலைதீர்ந்தே. (௭)

முடியுணர்ந்திடுவோன்சென்றமுதுமறைக்கிழவனவ்வா
றுடிவறமீதுபோகியொன்றுந்தேரானேயாகி
மடிவரும்வலியுமாய்ந்துமயங்குவானெதிரேதோன்றிக்
கடிதவில்லாதவாசக்கைதையொன்றெய்தக்கண்டான். (௮)

வாருமொருமைகநாமெங்ஙனிருந்துநீவருவாயென்னத்
தருமமிகுமொருகைக்குந்தம்பிரான்முடிமேனின்று
வருகுவன்படவிக்கென்னவழுவியெத்துணைநாளாயிற்
றொருவுறவுரைப்பாயென்னவுகம்பலசென்றவென்ன. (௯)

என்னுருசமின்றியாமற்றென்னகாரியஞ்செய்தோமென்
றன்னமுருசநூற்றகைதையாகியதேவைநோக்கிக்
கன்னலுறுமுடியையன்னங்கண்டதென்றுரைக்கவேண்டும்
மின்னுபுதமலரியாவெலன்றுவேண்டினன்விரிஞ்சனென்பான். (௧௰)

பற்றுமீதாராதுணைகைதையோவெனவுவந்தகந்தை
யற்றமாலெதிர்சென்றியானேபெரியவனறிதியென்றான்
சுற்றநான்முகனிசென்றுகண்டதுபொய்யேயென்றான்
சொற்றமாயவமெய்யென்றேகூறியதடைந்தகைதை. (௧௧)

அன்னகாலையிலெங்கோமானவிர்சழனின்றுதோற்றி
பொன்னேபொய்சொன்றாய்கைதாயினியெனக்காகாவென்று
முன்னமேசுற்றுநிற்குமுளரிவானவனைநோக்கிப்
பன்னருஞ்சிருட்டிதீர்ந்துபடுதுயருறுகவென்றான். (௧௨)

புண்ணியன்சாபங்கேட்டுப்பொருக்கெனப்பணிந்துநாயேன்
பண்ணியபிழையுட்கொள்ளாதருள்பரம்பரனேயென்று
நண்ணியமறையோன்வேண்டிக்கதறிடக்கருணைமூர்த்தி
நண்ணியவிரக்கம்பூண்டுநான்முகற்கிதுவிளம்பும் (௧௩)

கொடுத்தவிச்சாபந்தீரக்குறுக்கைவீரட்டத்தென்று
மடுத்தகண்கடுவினீழலமர்ந்தியோகீசப்பேர்பூண்
டுடுத்தநீருலகமேத்தவுற்றுநாமமர்வோந்தீமை
விடுத்தவத்தலத்தேசென்றுமேதகநமைப்பூசித்தி. (௧௪)

பிறங்குபேருண்மெய்ஞ்ஞானம்பிகையையும்வணங்கிப்போற்றி
யறங்குலாஞ்சூலதீர்த்தமாடுதிதினமுமற்று
மறங்குலாமழுக்கைநம்மையயங்கவத்தலந்தாபித்தி
சறங்குறுதென்றும்பூசைசடைப்பிடித்தாற்றிவம்மோ. (௧௫)

திசைமுகத்தவநாஞ்சொற்றசிறப்புறுவிரதம்பூண்டு
வசையறப்பன்னாள்வைகில்வையகம்படைப்பாயென்று
நசைமிகவருளிநோக்கநாரணன்றனக்குநல்கி
யிசைமிகுசுவேச்சைமேனிமறைத்தனனெங்களையன். (௧௬)

நாயகனுரைத்தவாறேயரிசிவனத்தைநண்ணித்
தோய்படண்படைத்தசெல்வன்குலதீர்த்தம்படிந்து
மேயவெண்ணீறுபூசிவீரட்டேசுரனைஞானத்
தாயையாதரித்துப்போற்றிச்சாபவெந்தீமைதீர்வான். (௪௭)

நிருதிவாழ்திசையிற்சென்றநிகழுநல்யாகமொன்று
சுருதிநான்முகனன்றாற்றிததோலாறனுக்குவப்புச்செய்தான்
குருதியாழல்சோன்னகுண்டத்தையுலகிலுள்ளோர்
கருதிநாளுநோமக்குளமெனக்கரைவராமாதோ. (௪௮)

கீழ்த்திசையெழுந்துசென்றுகேடிலோரிலிங்கந்தாபித்
தாழ்தருதீர்த்தமொன்றுண்டாக்கியப்புனல்கொண்டாட்டி
வாழ்தருமன்புபொங்கமலாமுதற்கொடுபூசித்தே
தாழ்தரலியற்றிநின்றுதோத்திரஞ்சமையச்செய்வான். (௪௯)

இருளெனச்சிலவான்மாக்கட்கியைந்தபேரொளியேதிங்கட்
பொருளெனச்சிலவான்மாக்கட்பாலமர்பொருளேயென்றா
மருளெனச்சிலவான்மாக்களகத்தமர்மணியேஞானத்
தெருளெனத்தெளியான்மாக்கள்சிந்தையூறமுதேபோற்றி. (௫0)

முன்னவத்தையிற்பல்பூக்கண்மொய்தருத்தழலாய்நாப்பண்
மன்னவத்தையிற்பாடாணமருவியதழலாயென்றும்
பின்னவத்தையிற்கரும்பொன்பிறங்குறுதழலாயுற்றும்
பன்னவத்தையிற்படாதபராபரப்பொருளேபோற்றி. (௫௧)

உயிர்களினளவைக்கேற்பவுடன்முதலாயநான்குஞ்
செயிரறுபருவநோக்கிச்சிறப்புறநல்கிநாளு
மயர்வறவறமேநல்கியதுமிகமலங்களாய
மயர்வறுத்தின்பமுய்க்கும்வள்ளலேபோற்றிபோற்றி. (௫௨)

தோற்றமுமீறுமில்லாச்சுயம்பிரகாசபோற்றி
மாற்றமுமனமுந்தேராவான்பெரும்பொருளேபோற்றி
யேற்றமுந்தாழ்வுமில்லாவென்றுமோரியல்பேபோற்றி
நாற்றமுமலரும்போன்றுநிறைதருநலமேபோற்றி. (௫௩

வெறுக்கையொன்றின்றிநாயேன்செய்பணிவிழைவாய்போற்றி
யொறுக்கையுமருளேயாகவுவந்தருள்புராணபோற்றி
மறுக்கையொன்றின்றியன்பர்குற்றமுமகிழ்வாய்போற்றி
குறுக்கைவீரட்டநாளுங்குலவும்யோகீசபோற்றி. (௫௪)

இத்தகுநியமமமைந்திருபதுவருடமுவ
ழெழுந்தமவாசனமர்ந்திடுசெயலுறகோதூச
சித்தநன்மகிழ்வெய்திச்திருந்துதன்காட்சிமறை
மத்தகமடாசெல்விகொடுத்தனண்மற்றவற்கே. (௬)

கண்டனனடிசாழ்ந்துகைகுவித்துறச்சூழ்ந்து
விண்டவெங்கவலையனுப்பேதகயனமகிழ்ந்து
தண்டலில்விழிபொழியுந்தாரைமண்ணிழிந்தோடத்
தொண்டனுய்ந்தெனன்றுதோத்திரம்பலசெய்வான் (௭)

உறைதருபேரன்பினடியவர்பெருவாழ்வே
பிறைமுடியவர்வாயம்பெட்புறப்படர்கொடியே
மறைமுடிவெனுமாவின்மருவியவொருகுயிலே
பொறையலியருளன்னபூரணியுனக்கபயம். (௮)

நண்ணியவுயிர்பலவுநலமுறவருடாயே
பெண்ணியபடியடியார்க்கினிதருள்பூங்கொம்பே
தண்ணியமெய்ஞ்ஞானசத்துவகுணக்கிளியே
புண்ணியவருளன்னபூரணியுனக்கபயம். (௯)

எனத்துதிபுரிவேந்தர்க்கிரங்கியெம்பெருமாட்டி
யனைத்துநினைந்ததெய்வன்மைந்தசொற்றிடுவென்னத்
தனித்தநின்னடிக்கன்பேதந்தருளதுவன்றி
யினித்தவண்கதியாயவின்பமுமுறவருள்வாய். (௧௦)

அன்றியுமடியேனுளணிசெழுசோணாட்டுத்
துன்றியபெருங்காட்டாற்சொல்விளைவதுதீர்ந்து
கன்றிடுமெதுநீரக்கடைக்கணித்தருளென்னப்
பொன்றலிலருளன்னபூரணியிதுகூறும். (௧௧)

நின்னுடைத்திருநாட்டுநிலவரிதகிவனத்து
மன்னுடைவிசுவேசன்மகத்துவயோகீசன்
பின்னமிலருண்ஞானம்பிகைபொருநாமாகி
நன்னயமுறவமர்வோநண்ணுதியவண்மைந்த. (௧௨)

தூயமந்தாகினியேகுலநற்றடமாகி
மேயதுநீமூழ்கிவேட்கையினருச்சித்துப்
பாயநலிலிங்கமொன்றுபதிட்டைசெய்ததைப்போற்றி
யாயநின்கருத்தெல்லாமடைமதிபோவென்றாள். (௧௩)

உய்விடமுங்காடாயினைதருமென்றேட்டு
ளவ்விடமெப்படிநானறிகுவனருளென்ன
வெவ்விடமுண்டருள்செய்வித்தகர்திருமேனிச்
செவ்விடமமர்தேவிகருணையினிதுசெப்பும்· (௧௪)

கருத்துறநீபோற்றுங்காளியைமுன்விட்டுக்
திருத்தமதுறநீபின்செல்லுதியவண்மேனி
பொருந்தியவெண்மணியுமோசையற்றிடப்பொங்கி
யுருத்திகழ்தழற்கொழுந்துமொழிதருமஃதோர்தி· (௧௫)

சொற்றதவ்விடமென்றேதுணிந்துநின்பணிசெய்து
முற்றவுமடையென்றுமொழிந்தனளருக்காந்தாள்
மற்றவட்கணிகலங்கள்வழங்கினன்விடைபெற்றுக்
கற்றவர்புகழ்மன்னன்காளியைநினைந்தனனே. (௧௬

கணகணவெனவெட்டிக்கண்டையுந்தனியார்ப்ப
வணவியதீசகொழுந்தேழுடுக்குலகூடுருவத்
தணவறவந்தாளைத்தாழ்ந்தனன்முன்செலுத்தி
யுணர்தரும்படிபின்னேபோயினனொருவேந்தன். (௧௭)

அரிதகிவனவெல்லையடைதலுமணியோசை
தெரிதரவொழிந்ததுபோய்த்தீர்ந்ததுதழற்கொழுந்தும்
புரிதருமவ்விடத்திற்பொருக்கெனப்பணிந்தெழுந்தான்
விரிதருமானந்தவெள்ளத்துமூழ்கினனே. (௧௮)

புண்ணியமலிகுலப்பொய்கைதன்னீராடி
யண்ணியயோகீசனவனிடத்தமர்ஞானப்
பெண்ணிவரிருவோர்தம்பிறங்குபொற்பதம்போற்றி
யுண்ணிசழ்பெருகன்பினுவந்தனன்பூசித்தான். [௧௯]

வடதிசைவயின்ஞானமாநதிக்கரையெய்தித்
திடமுறவொருகோசந்திகழ்தரத்தாபித்துப்
படருமட்புனலாட்டிப்பத்தியிற்பூசித்துத்
தொடர்தருபத்தாண்டுதொழுதவண்மருவினனே. [௨௦]

அம்மையும்விருத்தவடிவடைந்தவனெதிர்தோன்றிச்
செம்மைகொள்வெண்சோறுதிகழ்தரக்கான்றிடலு
நம்மையின்றெடுத்தாள்வாணற்றிருவருளென்றே
வெம்மையினதிசயித்தான்பரந்ததுமேதினியே. [௨௧]

விடைகொடுபெதியடைந்தான்மேவியவன்றுமுத
லுடையதன்றிருப்பெருநாடொருங்குநலன்செய்யோ
யிடையறநெல்விளைந்ததிரிந்ததுகாடெல்லாந்
தடையறுபெரும்பொன்னித்தண்புனலினாயும். (௨௨)

மன்னவனதுகண்டுமனமகிழ்ச்சியிற்றிலோக்குப்
பன்னருநெடுங்காலம்பரம்பரன்பணிசெய்தே
புன்னரும்பலபோகமொருங்கனுபவித்திற்றின்
முன்னரும்யோகீசன்முழுமலர்ப்பதஞ்சேர்ந்தான். (௨௩)

சூலியினுருநின்றுஞ்சிந்தியசுடுசெந்தீ
வாலியநிலம்வீழ்ந்துமற்றதுகுழிசெய்ய
வாலியபுனரேன்றிற்றன்றுதொட்டதைச்சொல்வார்
மேவியல்சுவாலாதீர்த்தமெனவிண்ணவரே. (௨௪)

மற்றவளவணியங்கிவன்மைசெய்யசுரர்களைக்
கொற்றவொள்வாள்கொண்டுகோதறத்தடிந்திட்டு
வெற்றிகொண்டியோகீசன்வாமத்துமேவுற்றே
யுற்றவர்களென்றுங்காத்தினிதுறைவாளால். (௨௫)

சயத்துவசப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬௬௬.

———:o:———

# அகத்தீசப்படலம்.

எவ்வுயிருமின்பமுறயிமையவரையிற்பெருமானார்
செவ்விமலருமையாளைத்திருக்கல்யாணஞ்செய்தருணாட்
கௌவையொழிந்துய்ந்தனமென்றெல்லார்களுமக்கடையடையப்
பௌவநெடும்புவிதென்பாலுயர்ந்துவடபாற்றாழ்ந்ததே. (௧)

கோவென்றுசொலற்கேற்பக்கோவினுருவங்கொடுபுவிமாண்
றேவென்றமொழிபவன்பாற்சென்றுவணங்கிமுறையிடலு
மாவென்றுகனியிரங்கியருகுநின்றகுறுமுனியை
வாவென்றுநோக்கருளிமலையாசலம்போயமவென்றான். (௨)

என்றபொழுதுளங்கலங்கியெந்தாய்நினதுகலியாண
மொன்றவெவருங்காணவொருவனுனேபாவியேன்
கன்றவுளங்கவலுவனோகாணக்கவலைமிகப்பூண்டு
மன்றமமர்பெருமவெனைத்தள்ளிவிடுதல்வழக்கேயோ. (௩)

பரவுஞானம்பிசைசாதமுந்தொழா
வரவுசேர்மெய்வரமொருங்குகொண்டனன்
கரவுசேர்மகிடமாமுகவன்கட்புகுட
விரவுசேர்குழலிஞளிகல்விளைத்தனள். (௨

இண்டிறற்சும்பனுநிசும்பனுந்தெறு
சண்டனுமுண்டனுந்தானவக்குழாத்
தெண்டருமற்றுளயாரும்வாரிசூழ்
மண்டலத்துருடரவாளின்மாட்டினன். (௩)

படைமுழுதொழிதலும்பசதிநேர்பொரு
கடையெனுமேதிமாமுகனைக்கன்னிநேர்
தடையறச்சென்றவன்றலையைவெட்டியே
யடைவுறமிதித்தனளவனிவீழ்த்தியே.

தன்றுணையாமபிராமிசாமுண்டி
வன்றிறல்மகேச்சரிவராகிவைணவி
யன்றமிந்திராணிகௌமாரியாகிய
வென்றியோரெழுவர்க்கும்விர்தைகூறுவாள்.

அரிதகிவனப்பிரானருள்வரத்திஞன்
மருவியபகைதெறுவன்மைபெற்றனே
மெரிவிழியவனயரிந்தவாலய
மொருவுறீரிருமெனவுரைத்திருத்திஞள்.

நிருதிதன்றிசையிலோர்நிலவுமாலயத்
தொருதினமேனுநீங்காமலுத்தமன்
சுருதிசொல்பாதமுட்சுமந்துமேதிவெங்
குருதிவன்றலைமிசைநிற்குங்கொற்றவை

ஓமவாவிப்புனலுவந்துமூழ்கியத்
தாமவார்குழலிருதாளும்போற்றுவார்
காமவார்கலிப்புவிநயக்கவாழ்ந்தபி
னேமயோகிசனையெய்திவாழ்வரே.

வுளமெலாந்தன்னடியுற்றுமேவுறக்
சனமெலாமறுத்திருகைகுவித்துநற்
றனமெலாமிபெவர்தமக்குநாடொறும்

# காமீசப்படலம்.



மாத்திரமெய்தவே
ருகொண்டமன்மதன்
ன்றொழிற்பற்றினான்
மவக்கவன்றனன். (௧)

போன்றவொருவனே
போன்றுபுணர்த்துவா
தியநாட்டினு
வாரிதிமுந்தவே. (௨)

சயுந்தொழிறப்பவே
செயுந்திறமென்னென
செயுள்ளமயங்கினான்
சயுங்கொடிவேந்தனே. (௩)

ணைநம்மைமுனிந்தரு
நாதனடித்துணை
ரோத்திநயக்கவே
ணயாவையுமெய்துவாம். [௪]

முன்னியெழுந்தன
ழுதேவியுடன்வரச்
றுதன்னுயிர்செற்றவ
வாழ்தலநண்ணினான். [௫]

ாவியிற்றோய்ந்தனன்
மேத்தநகுதளிக்
ஞ்கண்டெட்குறுகினன்
லாசனன்பாங்கரே [௬]

ல்வீழ்ந்துபணிந்தனன்
ாவந்திவண்ணனே
னேனுக்கருளென்றான்
பின்மீனுறக்கொண்டவன். [௭]

மன்றுஞானையிலையும்
பன்னுமன்பிற்பணிந்தனன்
றன்னுதோத்திரஞ்சொல்லியே
யுன்னுசிந்தையுருகினான். [௮]

நிலவுமவ்விடநின்றெழூஉ
வுலவிராக்கதனொண்டிசைக்
குலவுமூன்றுகுரோசதி
னலவுவாமதனண்ணினான். [௯]

பரவுலிங்சப்பதிட்டையோன்
றரவுநீரொடூற்றினான்
பொரவுமேவரப்போற்றினா
னிரவுமால்களிற்றேறந்தலே. [௧0]

தூண்டுசோதியைத்தூமலர்
வேண்டுமொகொடுமேவிநா
ருண்டுபூசனையாற்றினான்
பூண்டுபேரன்புபொங்கவே. [௰௧]

ஆங்குநாதனனங்கநின்
றோங்குபூசையுவந்தனந்
தாங்குசீர்த்தியித்தானநின்
பாங்குநாமத்தைப்பன்னுக. [௰௨]

எனக்குமென்னிடதேந்திழை
தனக்குநின்பெயர்சாலுக
மனக்குவேண்டும்வரந்தந்தோ
னினக்குயாவுநிரம்புமே. [௰௩]

என்றுகூறினனேத்தினான்
குன்றறாவிடைகொண்டனன்
சென்றுதன்பதஞ்சேர்ந்தனன்
வென்றுவாகைமிலையவே. [௰௪]

காமனூர்சென்றுகாமிநீர், காமமேவமுழுகிநங்
காமநாதனைக்கைதொழிற், காமம்யாவுங்கலக்குமே. [௧௫]

காமீசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௭௧0.

———'0'———

# தலவிசேடப்படலம்.

அரிசிவனைத்துமேன்மையாவராலறையமுற்றும்
விரிதலைச்சேடனாலும்விளம்பிடமுற்றுங்கொல்லோ
தெரிதருவிதமெமக்குத்தெரிந்தமாத்திரமேசொல்வேம்
புரிசடையந்தணீர்காள்பொருந்துறப்போற்றிக்கேண்மின்.

வுரைத்தவத்தலத்துநீசனொருதினம்வசித்தானேனும்
விரித்தபூங்கடுக்கையண்ணல்விளங்குலசடைவனென்னி
லிரைத்தசீர்வேலைவைப்பினிருபிறப்பாளராதி
வரைத்தயாவருக்குஞ்சொல்லவேண்டுமோவசிக்கும்பேறு.

மறைபகவொருவற்கன்னம்வழங்குவாரொருபோதென்னிற்
குறைவறவமிர்ததானம்பலபோதுகொடுத்தபேறு
நிறைதரப்பலநாளன்னநிரப்பறநல்குவார்கள்
கறையறவடையாநிற்கும்பலனையார்கரையவல்லார்.

படிபுகழ்குறுக்கைமேவிச்சூலதீர்த்தம்படிந்து
நெடியவனயனுங்காணாநிமலயோகீசற்போற்றி
முடிவிலாவருண்மெய்ஞ்ஞானம்பிகையையுமுன்னியோர்நா
ளடியவற்கன்னதானமன்பொடுசெய்வாராகில்.

நன்மனைக்கிழத்திமேவிநன்மகப்பேறுவாய்ந்து
பொன்முதலாயசெல்வம்பொலிதரக்கிளைஞர்சூழப்
பன்னெடுங்காலமிந்தப்பார்மிசைவாழ்ந்துபின்னர்
முன்னவனுலகபோகம்மூழ்கிவீற்றிருப்பர்மாதோ.

தரைபுகழ்ந்தேத்துங்காமதகனநன்னகரந்தன்னிற்
புரையறுமறையோருக்கும்புண்ணியவடியாருக்கு
முறைபெறவத்திராதிதானங்களுவந்துசெய்வோர்
கரையகல்விமானமூர்ந்துகயிலையையடைந்துவாழ்வார்.

கமலைபூசித்தகம்பகரபுரமடைந்தெந்நாளும்
விமலவோர்சிரார்த்தஞ்செய்யிற்கயைபுரிமிகுபேறெய்து
மமர்பெறுசூலவாவியதிற்படிந்தெழுவோர்பொல்லா
மும்மலவேரறுத்துமேலாமுத்தியங்கரையேசேர்வார்.

கங்கையேமுதலவாயநதிகளிற்கலந்துமூழ்கிற்
பொங்குமாபலங்களெல்லாம்புரிந்தொருதினத்துமூழ்கிற்
றுங்கமார்யோகதீர்த்தந்துணைதரநல்குமென்று
லங்கதன்பெருமைநம்மாலறைதரமுற்றுங்கொல்லோ.

அத்தகுசூலதீர்த்தத்தர்மமீன்றவளையாதி
யெத்தகையுயிருமெய்துமின்பமற்றிலகில்வேறே

# தலவிசேடப்படலம்.

எவ்விடத்தமருவோருமெய்த்தியச்சூலதீர்த்தஞ்
செவ்விதிருடவேண்டுஞ்சிவனூருதென்னிலுள்ளத்
தவ்விபமொழியவங்கீரவரவழைதமீசனும்பட
லெவ்வமிலவிதியேயாகுமன்னதுமியலாதென்னில். (க0)

ஆடிவசதோணையேனுஞ்சேவித்தலமாமந்த
நீடியவாமூமொல்லாவெணிணமிகுநேயத்தோடு
நாடியமறைமியாக்கம்பொனல்கியேயாடுவித்தல்
பாடியல்விதிபாமென்றுபகருவாபுலமைசானோர். (கக)

குணமலிபோகவாவிக்குறக்கைவீரட்டமேய
பணவரவணியும்பெம்மான்பங்கயன்றிருமாலாதி
யணவியவானோர்போற்றவணிமணிமறுகிற்போது
மணவிழாக்காணபோமகொள்ளும்பலனுக்கோர்வரம்புமுண்டோ. (கஉ)

திருவிழாமுழுதுஞ்சென்றுசேவித்தற்கொல்லாதேனும்
மொருவுறதடைந்துகாமதகனமொன்றேனுமன்பின்
மருவுமாசேவித்தேததவேண்டுமெற்றதுசேவித்தார்
பெருகுமாபலனையாரேபேசுவாாபெருமைமிககீர். (கங)

அரம்பையர்போகம்வேண்டிலலர்மிசையிருக்கவேண்டில்
வரம்பறுநறும்பாலாழிமாசுணப்பள்ளிவேண்டி
னிரம்புமெய்ப்போகமேனுநினைததவாறடையவேண்டி
லுரம்பயிலியோகநாதர்தரிசனமொன்றேநல்கும். (கச)

கடுவடிமுளைத்தமூர்த்திககாமருதளியிறேனும்
வடுவில்விட்டிகையினேனும்வலியுடைச்சிலையினேனு
மொடிவறுபணிசெய்வோர்கணொழிவிலபோகத்தின்மூழ்கி
நெடியமாதேவன்வாழுநின்மலவுலகஞ்சார்வார். (கரு)

விளைநிலம்பொழில்களாதிமேவும்யோகீசற்கென்று
பளகறநல்குவோரும்பான்முதலாட்டுவோரு
முளநெகிழ்போகம்பன்னொளொருங்கனுபவிப்பரிற்றிற்
றளாயவிழ்கடுக்கைசூடத்தம்பிரானுலகில்வாழ்வார். (கசு)

ஆலயந்தனக்குவேண்டும்பாத்திரமணிபட்டாடை
ஞாலமுள்ளுவக்கும்பொற்பூணகுமணிக்கலமுன்யாவுஞ்
சாலவுங்கொடுப்போர்பேறுதம்பிரான்மொழிவதன்றி
யேலமற்றெம்மனோராலியம்பிடப்பாலதேயோ. (கஎ)

ஐயனுக்கினியதாயவபிடேகநிவேதனங்கள்
செய்யமற்றுபசாரங்கடிருவிழாச்சிறப்புமற்று
மெய்யடைதினவிழாக்கள்விருப்பொடுபெருக்குவோரை

# திருக்குறுக்கைப் புராணம்.

ஓங்குகோபுரத்துமற்றைப்பொலிதிகழாலயத்தும்
பாங்குறத்தீபமேற்றும்பண்பினர்யாவரேனு
நீங்குறப்பாவமண்மேனிரம்புறத்துய்த்தபின்னர்
வீங்குசாரூபம்பெற்றேவிளங்குதற்கையமில்லை.

மறையவர்திருக்கையாத்தமாசலத்தமைத்துநல்கிற்
குறைவருபோகமெல்லாங்குலவுறத்துய்த்துவாழ்வர்
நறைகமழலங்கல்வேணிநாயகனாரிலேபோகத்தி
லுறைதருதிருக்கைபெற்றோரவராலன்மற்றும்யாரே.

…ரிதகிவணத்துவசஞ்செய்தலுமவிருளுருலப்
…ரிபுனலடைந்துமேவிதோய்தலும்புகழ்யோகீசர்
…ரிபமிகக்கடைந்துநாளும்பிசையிவாசேவைசெய்யும்
விரிபெருந்தவமுமுண்டேல்வேண்டுவதுலகத்தென்னே.

பெருக்கியத்தவந்தினமிக்கிராபிறங்குயோகீசமேன்மை
சுருக்கிவிண்டனம்விரித்துச்சொலலநம்மான்முற்றுந்
தருக்கியமறையங்கூறத்தகையதுவென்றேவான்மி
நெருங்கியமனத்திறம்பாறுமென்றனனுயர்ந்தசூதன்.

சூதமாமுனிவனன்பிறசொற்றதுமனத்துட்கொண்டு
போதமாமுனிவர்யாரும்புகழ்தியிலுவகைபூத்தார்
காதலாமலர்ச்சிவலிங்கத்தர்ச்சனையுஞ்செய்து
மேதகுமுபசாரங்களியற்றினார்விரும்பிமேன்மேல்.

குணத்தவரன்றுதொட்டுக்குறுக்கைவீரட்டநாதர்
மணத்தயோகீசனாரும்பிகையுமாமலர்த்தாளுன்னி
புணர்த்தருமின்பவெள்ளமூழ்கினரொருங்குயாவை
புணர்த்துமற்றவையுந்தீர்ந்தார்பொருவருமுத்தராயே.

இத்தருபுராணங்கேட்போரெழுதுவோர்படிப்போர்யாரு
முத்தமவாழ்க்கைமேவியுவந்துபேரின்பந்துய்ப்பார்
சத்தமுற்றெழுதிவைத்துப்போற்றுசூழ்மனைகடோறும்
வித்தகத்திருநீங்காதுமேவிவாழ்ந்திருக்குநாளும்.

வாழி

நிறைதருசைவம்பொலிகவைதிகமோங்குகமுகிலுநீடுவாழ்க
நறைமலியுங்குழற்றிருஞானம்பிகைதன்பிறங்குமருணலந்தழைக்க
பிறையணியகுறுக்கைநகர்செழிக்கயோகீசனும்வீரட்டேசர்
மறைபரவுமணிமன்றுணடகவிலுங்குஞ்சிதத்தாள்வாழ்கமாதோ.

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௭௧௧.

திருக்குறுக்கைப்புராணம் முற்றிற்று.